ஸுப்ர: - சுப்ரன்,
பப்ரு: ததைவ - பப்ரு முதலானவர்கள்
கந்தர்வ பதய: - கந்தர்வத் தலைவர்கள்.

**रविसोमाग्निवपुषां निवासः पुण्यकर्मणाम् ।**
**अन्ते पृथिव्या दुर्धर्षास्तत्र स्वर्गजितः स्थिताः ॥**

**ரவிஸோமாக்நி வபுஷாம் நிவாஸ: புண்யகர்மணாம் ।**
**அந்தே ப்ருதிவ்யா துர்தர்ஷாஸ்தத்ர ஸ்வர்கஜித: ஸ்திதா: ॥** 46

ப்ருதிவ்யா: - பூமியின்
அந்தே - எல்லையில்
ரவி ஸோமாக்நி - சூரியன், சந்திரன், அக்னி, இவர்கள்
வபுஷாம் ஒளிகொண்ட
புண்ய கர்மணாம் - புண்ணியம் செய்தவர்களுடைய
நிவாஸ: - இருப்பிடம்,
தத்ர - அவ்விடத்தில்
துர்தர்ஷா: - எண்ணற்கரியவர்களாகிய
ஸ்வர்கஜித: - ஸ்வர்கம் ஜயித்தவர்கள்
ஸ்திதா: - வசிக்கின்றார்கள்.

**ततः परं न वः सेव्यः पितृलोकः सुदारुणः ।**
**राजधानी यमस्यैषा कष्टेन तमसा वृता ॥**

**தத: பரம் ந வ: ஸேவ்ய: பித்ருலோக: ஸுதாருண: ।**
**ராஜதாநீ யமஸ்யைஷா கஷ்டேந தமஸா வ்ருதா ॥** 47

தத: பரம் - அதற்கப்பால்
ஸுதாருண: - மிகக் கொடிய
பித்ரு லோக: - பிதிருலோகமானது
வ: - உங்களுக்கு
ஸேவ்ய: ந - போகத்தக்கதன்று.
ஏஷா - இது
கஷ்டேந - உள்ளத்தில் அச்சத்தை விளைவிக்கின்ற
தமஸா - இருளால்
வ்ருதா - சூழப்பட்டதாகிய
யமஸ்ய - யமனுடைய
ராஜதாநீ - ராஜதானி.

**एतावदेव युष्माभिर्वीरा वानरपुंगवाः ।**
**शक्यं विचेतुं गन्तुं वा नातो गतिमतां गतिः ॥**

**ஏதாவதேவ யுஷ்மாபிர்வீரா வானரபுங்கவா: ।**
**ஶக்யம் விசேதும் கந்தும் வா நாதோ கதி மதாம் கதி: ॥** 48



வானர புங்கவா: - வானரோத்தமர்களே!
வீரா: - சூரர்களே!
யுஷ்மாபி: - உங்களால்
ஏதாவ தேவ - இதுவரையில்தான்
கந்தும் - செல்வதற்கும்
விசேதும் வா - தேடுவதற்கும்
ஶக்யம் - சாத்தியம்.
கதிமதாம் - பறப்பதில் பேர்பெற்றவர்களுக்கும்
அத: - அதற்குமேல்
கதி: ந - செல்லுதல் முடியாது.

**सर्वमेतत् समालोक्य यच्चान्यदपि दृश्यते ।**
**गतिं विदित्वा वैदेह्याः संनिवर्तितुमर्हथ ॥**

**ஸர்வமேதத் ஸமா லோக்ய யச்சான்யதபி த்ருஶ்யதே ।**
**கதிம் விதித்வா வைதேஹ்யா: ஸந்நிவர்திதுமார்ஹத ॥** 49

யத் - எது
அன்யத் - சொல்லப்படாததாய்
த்ருஶ்யதே அபி - காணப்படுகிறதென்றாலும்,
ஏதத் - இது
ஸர்வம் - எல்லாவற்றையும்
ஸமாலோக்ய - பார்த்துக்கொண்டு,
வைதேஹ்யா: - வைதேகியாரின்
கதி: - இருப்பிடத்தை
விதித்வா ச - அறிந்துகொண்டும்,
ஸந்நி வர்திதும் - திரும்பிவர
அர்ஹத - கடவீர்கள்.

**यस्तु मासान्निवृत्तोऽग्रे दृष्टा सीतेति वक्ष्यति ।**
**मत्तुल्यविभवो भोगैः सुखं स विहरिष्यति ॥**

**யஸ்து மாஸாந்நிவ்ருத்தோऽக்ரே த்ருஷ்டா ஸீதேதி வக்ஷ்யதி ।**
**மத்துல்ய விபவோ போகை: ஸுகம் ஸ விஹரிஷ்யதி ॥** 50

ய: - எவன்
ஸீதா - 'ஸீதை
த்ருஷ்டா - காணப்பட்டாள்'
இதி - என்று
மாஸாத் அக்ரே - ஒரு மாதத்திற்கு முந்தியே
நிவ்ருத்த: - திரும்பி வந்தவனாய்
வக்ஷ்யதி து - சொல்வானோ,
ஸ: - அவன்
போகை: - போகங்களால்
மத்துல்ய விபவ: - என்னை நிகர்த்த பெருமையுற்றவனாய்

ஸுகம் - மனக்குறையில்லாது
விஹரிஷ்யதி - காலங்கழிப்பான்.

ततः प्रियतरो नास्ति मम प्राणाद्विशेषतः ।
कृतापराधो बहुशो मम बन्धुर्भविष्यति ॥

தத: ப்ரியதரோ நாஸ்தி மம ப்ராணாத்விஶேஷத: ।
க்ருதாபராதோ பஹுஶோ மம பந்துர்பவிஷ்யதி ॥ 51

மம - எனக்கு
ப்ராணாத் - உயிரினும்
விஶேஷத: - மேம்பட்டவனாவான்.
தத: - அவனினும்
ப்ரியதர: - அதிகப்பிரியத்திற்குப் பாத்திரமானவன்,
அஸ்தி ந - ஒருவரும் இல்லை.
பஹுஶ: - பலவாறு
க்ருதாபராத: - குற்றங்களைச் செய்தவனாயினும்
மம - எனக்கு
பந்து: - ஆப்த நண்பனாக
பவிஷ்யதி - இருப்பான்.

अमितबलपराक्रमा भवन्तो विपुलगुणेषु कुलेषु च प्रसूताः ।
मनुजपतिसुतां यथा लभध्वं तदधिगुणं पुरुषार्थमारभध्वम् ॥

அமிதபலபராக்ரமா பவந்தோ
விபுலகுணேஷு குலேஷு ச ப்ரஸூதா: ।
மநுஜபதி ஸுதாம் யதா லபத்வம்
தததி குணம் புருஷார்தமாரபத்வம் ॥ 52

பவந்த: - நீங்கள்
அமித பல பராக்ரமா: - அளவுகடந்த ஆற்றலும் ஆண்மையும் உடையவர்கள்.
விபுலகுணேஷு - மகத்தான உத்தம குணங்கள் விளங்கும்
குலேஷு ச - நல்ல குலங்களிலேயே
ப்ரஸூதா: - பிறந்தவர்கள்.
மநுஜபதி ஸுதாம் - மன்னரின் மகளை
யதா - எப்படிச் செய்தால்
லபத்வம் - அடைவீர்களோ
தததி குணம் - அதற்கேற்றதாகிய
புருஷார்தம் - முயற்சியை
ஆரபத்வம் - செய்யக்கடவீர்கள்.

இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே
சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே
தக்ஷிண ப்ரேஷணம் நாம ஏகசத்வாரிம்ஶ: ஸர்க: ॥



த்விசத்வாரிம்ஶ: ஸர்க: - 42

अथ प्रस्थाप्य सुग्रीवस्तान् हरीन् दक्षिणां दिशम् ।
अब्रवीन्मेघसंकाशं सुषेणं नाम यूथपम् ॥

அத ப்ரஸ்தாப்ய ஸுக்ரீவஸ்தான் ஹரீன் தக்ஷிணாம் திஶம் ।
அப்ரவீன்மேக ஸங்காஶம் ஸுஷேணம் நாம யூதபம் ॥ 1

ஸுக்ரீவ: - சுக்ரீவன்
தான் - அந்த
ஹரீன் - வானரர்களை
தக்ஷிணாம் - தக்ஷிண
திஶம் - திக்குக்கு
அத - அப்பொழுது
ப்ரஸ்தாப்ய - அனுப்பிவிட்டு,
மேக ஸங்காஶம் - மேகத்தை நிகர்த்த
ஸுஷேணம் நாம - சுஷேணனென்பவனை
யூதபம் - சேனைத்தலைவரில் ஒருவனென
அப்ரவீத் - ஸ்ரீராமருக்குத் தெரியப்படுத்தினான்.

तारायाः पितरं राजा श्वशुरं भीमविक्रमम् ।
अब्रवीत् प्राञ्जलिर्वाक्यमभिगम्य प्रणम्य च ॥

தாராயா: பிதரம் ராஜா ஶ்வஶுரம் பீமவிக்ரமம் ।
அப்ரவீத் ப்ராஞ் ஜலிர்வாக்ய மபிகம்ய ப்ரணம்ய ச ॥ 2

ராஜா - ராஜா (ஸுக்ரீவன்)
பீம விக்ரமம் - மகா ஆண்மையுற்றவனும்
ஶ்வஶுரம் - மாமனாருமான
தாராயா: - தாரையின்
பிதரம் - தந்தையை
அபிகம்ய - கிட்டி,
ப்ரணம்ய - நமஸ்கரித்து,
ப்ராஞ்ஜலி: - கைகூப்பிக்கொண்டு
வாக்யம் ச - ஒரு சொல்லையும்
அப்ரவீத் - சொன்னான்.

मरीचिपुत्रं मारीचमर्चिष्मन्तं महाकपिम् ।
वृतं कपिवरैः शूरैर्महेन्द्रसदृशद्युतिम् ॥

மரீசி புத்ரம் மாரீசமர்சிஷ்மந்தம் மஹாகபிம் ।
வ்ருதம் கபி வரை: ஶூரைர்மஹேந்த்ர ஸத்ருஶத்யுதிம் ॥ 3

बुद्धिविक्रमसंपन्नं वैनतेयसमद्युतिम् ।
मरीचिपुत्रान् मारीचानर्चिर्मालान् महाबलान् ॥
புத்தி விக்ரமஸம்பந்நம் வைநதேயஸமத்யுதிம் ।
மரீசி புத்ரான் மாரீசா நர்சிர்மாலான் மஹாபலான் ॥
ऋषिपुत्रांश्च तान् सर्वान् प्रतीचीमादिशद्दिशम् ॥
ரிஷிபுத்ராம்ஶ்ச தான் ஸர்வான் ப்ரதீசீமாதிஶத்திஶம் ॥ 4

மரீசி புத்ரம் - மரீசியின் புத்திரனான
மாரீசம் - மாரீசனையும்,
கபிவரை: - சிறந்த வானரர்களான
ஶூரை: - சூரர்களால்
வ்ருதம் - சூழப்பட்டவனும்
மஹேந்த்ர ஸத்ரு ஶத்யுதிம் - இந்திரனை நிகர்த்த ஒளியுடையவனும்
புத்தி விக்ரம ஸம்பந்நம் - புத்தியும் ஆண்மையும் நிறைந்தவனும்,
வைநதேய ஸமத்யுதிம் - கருடனுக்குச்சமானமான பெருமையுடையவனும்,
மஹாகபிம் - பெயர்பெற்ற வானரனுமான
அர்சிஷ்மந்தம் - அர்ச்சிஷ்மானையும்,
மரீசி புத்ரான் - மரீசியின் புதல்வர்களாகிய
மாரீசாந் - மாரீசர்களையும்,
மஹாபலான் - மகா பலசாலிகளாகிய
அர்சிர் மாலான் - அர்ச்சிர்மாலர்களையும்,
தான் ஸர்வான் - அந்த எல்லா
ரிஷிபுத்ரான் ச - ரிஷி புத்திரர்களையும்,
ப்ரதீசீம் திஶம் - மேற்கு திக்குக்கு
ஆதிஶத் - கட்டளையிட்டான்.

द्वाभ्यां शतसहस्राभ्यां कपीनां कपिसत्तमाः ।
सुषेणप्रमुखा यूयं वैदेहीं परिमार्गत ॥
த்வாப்யாம் ஶதஸஹஸ்ராப்யாம் கபீநாம் கபிஸத்தமா: ।
ஸுஷேணப்ரமுகா யூயம் வைதேஹீம் பரிமார்கத ॥ 5

கபிஸத்தமா: - வானரோத்தமர்களே!
ஸுஷேண ப்ரமுகா: - ஸுஷேணனைத் தலைமையாய்க்கொண்ட
யூயம் - நீங்கள்
கபீநாம் - வானரர்களின்
த்வாப்யாம் - இரு
ஶத ஸஹஸ்ராப்யாம் - நூறாயிரவர்களோடு



வைதேஹீம் - ஸீதாதேவியை
பரிமார்கத - தேடுங்கள்.

सुराष्ट्रान् सहबाह्लीकाञ्शूरान् भीमांस्तथैव च ।
स्फीताञ्जनपदान् रम्यान् विपुलानि पुराणि च ॥
ஸுராஷ்ட்ரான் ஸஹ பாஹ்லீகான் ஶூரான் பீமான் ததைவ ச ।
ஸ்பீதாஞ்ஜனபதாந் ரம்யான் விபுலாநி புராணி ச ॥ 6

पुंनागगहनं कुक्षिं वकुलोद्दालकाकुलम् ।
तथा केतकषण्डांश्च मार्गध्वं हरियूथपाः ॥
புன்னாக கஹனம் குக்ஷிம் வகுலோத்தாலகாகுலம் ।
ததா கேதகஷண்டாம்ஶ்ச மார்கத்வம் ஹரியூதபா: ॥ 7

प्रत्यक्स्रोतोगमाश्चैव नद्यः शीतजलाः शिवाः ।
तापसानामरण्यानि कान्तारा गिरयश्च ये ॥
ப்ரத்யக் ஸ்ரோ தோகமாஶ்சைவ நத்ய: ஶீதஜலா: ஶிவா: ।
தாபஸா நா மரண்யாநி காந்தாரா கிரயஶ்ச யே ॥ 8

ஹரிபுங்கவா: - வானரோத்தமர்களே
ஸுராஷ்ட்ரான் - ஸுராஷ்ட்ரதேசங்களையும்,
ஸஹ பாஹ்லீகான் - பாஹ்லீக தேசங்களோடு கூடவே
ஶூரான் ச - சூரதேசங்களையும்,
பீமான் ச - பீமதேசங்களையும்,
ரம்யான் - அழகிய
ஸ்பீதான் - செழித்த
ஜனபதாந் ததா - நாடுகளையும்,
விபுலாநி - விசாலமான
புராணி ச - நகரங்களையும்,
புன்னாக கஹனம் - புன்னாக மரங்கள் செறிந்த
வகுலோத்தால காகுலம் - மகிழ் உத்தாலகம், இவைகள் நிறைந்த
குக்ஷிம் ததா - குக்ஷிதேசத்தையும்,
கேதக ஷண்டான் ச - தாழைவனங்களையும்,
ப்ரத்யக் ஸ்ரோதோ கமா: - மேற்கு நோக்கி ஓடுகின்றவைகளும்,
ஶிவா: - புண்யமானவைகளும்,
ஶீதஜலா: - குளிர்ந்த ஜலமுடையவைகளுமான
நத்ய: - நதிகளையும்,
தாபஸாநாம் - ரிஷிகளுடைய
அரண்யாநி - ஆச்ரம வனங்களையும்,
காந்தாரா: - காடுகள்

கிரய: - மலைகள்
யே ச - எவைகளோ அவைகளையும்
மார்கத்வம் - திரிந்து தேடுவீர்களாக.

ततः स्थलीं मरुप्रायामत्युच्चशिरसः शिलाः ।
गिरिजालावृतां दुर्गां मार्गध्वं पश्चिमां दिशम् ॥

தத: ஸ்தலீம் மருப்ராயா மத்யுச்ச ஶிரஸ: ஶிலா: ।
கிரிஜாலாவ்ருதாம் துர்காம் மார்கத்வம் பஶ்சிமாம் திஶம் ॥ 9

ततः पश्चिममासाद्य समुद्रं द्रष्टुमर्हथ ।
तिमिनक्रायुतजलमक्षोभ्यमथ वानराः ॥

தத: பஶ்சிமமாஸாத்ய ஸமுத்ரம் த்ரஷ்டுமர்ஹத ।
திமி நக்ராயுதஜலமக்ஷோப்ய மத வானரா: ॥ 10

வானரா: - வானரர்களே!
தத: - அதன்மேல்
மருப்ராயாம் - நீரற்ற உவட்டு
ஸ்தலீம் - பிரதேசத்தையும்,
அத்யுச்ச ஶிரஸ: - மிகவுயர்ந்த கொடிமுடிகளையுடைய
ஶிலா: - மலைகளையும்,
கிரி ஜாலாவ்ருதாம் - மலைத்தொடர்களுற்றதும்
துர்காம் - உட்புகமுடியாததுமான
பஶ்சிமாம் - மேற்கு
திஶம் - திக்கை
மார்கத்வம் - தேடிவிட்டு,
தத: - அதன்மேல்
திமிநக்ராயுதஜலம் - திமிங்கலம், முதலை இவைகள் நிறைந்த ஜலமுடையதும்,
அக்ஷோப்யம் - கம்பீரமானதுமான
பஶ்சிமாம் - மேற்கு
ஸமுத்ரம் - சமுத்திரத்தை
ஆஸாத்ய - அடைந்து,
அத - அப்பொழுது
த்ரஷ்டும் அர்ஹத - பார்க்கக்கடவீர்கள்.

ततः केतकषण्डेषु तमालगहनेषु च ।
कपयो विहरिष्यन्ति नारिकेलवनेषु च ॥

தத: கேதகஷண்டேஷு தமாலகஹநேஷு ச ।
கபயோ விஹரிஷ்யந்தி நாரிகேலவனேஷு ச ॥ 11



தத: - அவ்விடத்தில்
கேதகஷண்டேஷு - தாழைவனங்களிலும்,
தமால கஹநேஷு ச - பச்சிலை வனங்களிலும்,
நாரி கேல வனேஷு ச - தென்னஞ்சோலைகளிலும்,
கபய: - வானரர்கள்
விஹரிஷ்யந்தி - உற்சாகமாய் காலம் கழிப்பார்கள்.

तत्र सीतां च मार्गध्वं निलयं रावणस्य च ।
वेलातटनिविष्टेषु पर्वतेषु वनेषु च ॥

தத்ர ஸீதாம் ச மார்கத்வம் நிலயம் ராவணஸ்ய ச ।
வேலாதட நிவிஷ்டேஷு பர்வதேஷு வனேஷு ச ॥ 12

मुरचीपत्तनं चैव रम्यं चैव जटीपुरम् ।
अवन्तीमङ्गलेपां च तथा चालक्षितं वनम् ॥

முரசீபத்தனம் சைவ ரம்யம் சைவ ஜடீபுரம் ।
அவந்தீமங்கலேபாம் ச ததா சாலக்ஷிதம் வனம் ॥

राष्ट्राणि च विशालानि पत्तनानि ततस्ततः ॥

ராஷ்ட்ராணி ச விஶாலாநி பத்தநாநி ததஸ்தத: ॥ 13

தத்ர - அவ்விடத்தில்
வேலாதட நிவிஷ்டேஷு - சமுத்திரக்கரையிலிருக்கின்ற
பர்வதேஷு - பர்வதங்களிலும்
வனேஷு - வனங்களிலும்
முரசீ பத்தனம் ச ஏவ - முரசீபட்டணத்திலும்
ரம்யம் ச - அழகிய
ஜடீபுரம் ஏவ - ஜடீநகரத்திலும்
அவந்தீ - அவந்திபுரியிலும்
அங்கலேபம் ச - அங்கலேபமென்னும் புரத்திலும்
ததா - அவ்வண்ணமே
அலக்ஷிதம் - அலக்ஷிதம் என்னும்
வனம் ச - வனத்திலும்
விஶாலாநி - விசாலமான
ராஷ்ட்ராணி - ராஜ்யங்களிலும்
பத்தநாநி ச - பட்டணங்களிலும்
ததஸ்தத: - எல்லாவிடங்களிலும்
ராவணஸ்ய - ராவணனுடைய
நிலயம் ச - இருப்பிடத்தையும்
ஸீதாம் ச - ஸீதாதேவியையும்
மார்கத்வம் - தேடக்கடவீர்கள்.

सिन्धुसागरयोश्चैव संगमे तत्र पर्वतः ।
महान् हेमगिरिर्नाम शतशृङ्गो महाद्रुमः ॥

ஸிந்துஸாகரயோஶ்சைவ ஸங்கமே தத்ர பர்வத: ।
மஹான் ஹேமகிரிர்நாம ஶதஶ்ருங்கோ மஹாத்ரும: ॥ 14

| | | |
|---|---|---|
| தத்ர | - | அந்த |
| ஸிந்து ஸாகரயோ: | - | ஸிந்துநதியும் சாகரமும் |
| ஸங்கமே | - | சேருமிடத்தில் |
| மஹான் | - | பெரியதும் |
| ஶத ஶ்ருங்க: | - | நூறு கொடிமுடிகளையுடையதும் |
| மஹாத்ரும: | - | பெரிய மரங்களடர்ந்ததுமான |
| ஹேமகிரி: நாம | - | ஹேமகிரி என்ற |
| பர்வத: | - | மலையிருக்கிறது. |

तस्य प्रस्थेषु रम्येषु सिंहाः पक्षगमाः स्थिताः ।
तिमिमत्स्यगजांश्चैव नीडान्यारोपयन्ति ते ॥

தஸ்ய ப்ரஸ்தேஷு ரம்யேஷு ஸிம்ஹா: பக்ஷகமா: ஸ்திதா: ।
திமி மத்ஸ்ய கஜாம்ஶ்சைவ நீடான்யாரோபயந்தி தே ॥ 15

| | | |
|---|---|---|
| தஸ்ய | - | அதனது |
| ரம்யேஷு | - | அழகிய |
| ப்ரஸ்தேஷு | - | தாழ்வரைகளில் |
| பக்ஷகமா: | - | பறக்கவல்ல |
| ஸிம்ஹா: | - | சிங்கங்கள் |
| ஸ்திதா: | - | வசிக்கின்றன. |
| தே | - | அவைகள் |
| திமி மத்ஸ்ய கஜான் ச ஏவ | - | திமிங்கலங்களையும் யானைகளையும் |
| நீடானி | - | அவை வசிக்கும் குகைகளில் |
| ஆரோபயந்தி | - | கொண்டுபோய்ச் சேர்க்கின்றன. |

तानि नीडानि सिंहानां गिरिशृङ्गगताश्च ये ।
दृप्तास्तृप्ताश्च मातङ्गास्तोयदस्वननिःस्वनाः ॥

தானி நீடாநி ஸிம்ஹாநாம் கிரிஶ்ருங்ககதாஶ்ச யே ।
த்ருப்தாஸ்த்ருப்தாஶ்ச மாதங்காஸ்தோயதஸ்வந நிஸ்வநா: ॥

विचरन्ति विशालेऽस्मिंस्तोयपूर्णे समन्ततः ॥

விசரந்தி விஶாலேऽஸ்மின் ஸ்தோய பூர்ணே ஸமந்தத: ॥ 16

| | | |
|---|---|---|
| கிரிஶ்ருங்ககதா: | - | மலைக்கொடுமுடிகளில் இருப்பவைகளும், |
| த்ருப்தா: | - | கொழுத்தவைகளும், |
| த்ருப்தா: | - | சந்தோஷமுற்றவைகளும், |
| தோயதஸ்வந நிஸ்வநா: | - | மேகவொலியை நிகர்த்து கர்ஜிக்கின்றவைகளுமான |
| மாதங்கா: | - | யானைகள் |
| யே ச | - | எவைகளோ அவைகள் |
| ஸமந்தத: | - | எங்குபார்த்தாலும் |
| தோய பூர்ணே | - | நீர் நிறைந்த |
| விஶாலே | - | விசாலமான |
| அஸ்மின் | - | இதில் |
| தானி | - | அந்த |
| நீடாநி | - | குகைகளில் |
| விசரந்தி | - | உலாவுகின்றன. |



तस्य शृङ्गं दिवःस्पर्शं काञ्चनं चित्रपादपम् ।
सर्वमाशु विचेतव्यं कपिभिः कामरूपिभिः ॥

தஸ்ய ஶ்ருங்கம் திவஸ்பர்ஶம் காஞ்சனம் சித்ரபாதபம் ।
ஸர்வமாஶு விசேதவ்யம் கபிபி: காமரூபிபி: ॥ 17

| | | |
|---|---|---|
| தஸ்ய | - | அதனது |
| திவஸ்பர்ஶம் | - | ஆகாயத்தை யளாவுகிறதும் |
| சித்ர பாதபம் | - | அழகிய மரங்களையுடையதும், |
| காஞ்சனம் | - | பொன்மயமானதுமான |
| ஶ்ருங்கம் | - | கொடுமுடியிலும் |
| ஸர்வம் | - | எல்லாவிடங்களிலும் |
| காமரூபிபி: | - | வேண்டிய உருவெடுக்கவல்ல |
| கபிபி: | - | வானரர்களால் |
| ஆஶு | - | விரைவில் |
| விசேதவ்யம் | - | தேடத்தக்கது. |

कोटिं तत्र समुद्रे तु काञ्चनीं शतयोजनाम् ।
दुर्दर्शां पारियात्रस्य गता द्रक्ष्यथ वानराः ॥

கோடிம் தத்ர ஸமுத்ரேது காஞ்சநீம் ஶதயோஜநாம் ।
துர்தர்ஶாம் பாரியாத்ரஸ்ய கதா த்ரக்ஷ்யத வானரா: ॥ 18

| | | |
|---|---|---|
| அத | - | அதன்மேல் |
| தத்ர ஸமுத்ரே | - | அந்த சமுத்திரத்தில் |
| வானரா: | - | வானரர்களே! |
| பாரியாத்ரஸ்ய | - | பாரியாத்ரமெனும் மலையினது |
| காஞ்சநீம் | - | பொன்மயமானதும், |
| ஶதயோஜநாம் | - | நூறுயோஜனை விஸ்தாரமுள்ளதும், |
| துர்தர்ஶாம் | - | கண்கொண்டு பார்க்கவொண்ணாததுமான |
| கோடிம் | - | கொடுமுடிக்கு |
| கதா: த்ரக்ஷ்யத | - | சென்று பாருங்கள். |

कोट्यस्तत्र चतुर्विंशद्गन्धर्वाणां तरस्विनाम् ।
वसन्त्यग्निनिकाशानां घोराणां पापकर्मणाम्॥

கோட்யஸ்தத்ர சதுர்விம்சத் கந்தர்வாணாம் தரஸ்விநாம் ।
வஸந்த் யக்நி நிகா ஶாநாம் கோராணாம்பாப கர்மணாம் ॥ 19

தத்ர - அவ்விடத்தில்
தரஸ்விநாம் - பலசாலிகளும்
அக்நி நிகாஶாநாம் - அக்னியை நிகர்த்தவர்களும்
கோராணாம் - கொடியவர்களும்
பாப கர்மணாம் - பாபச்செயலுற்றவர்களுமான
கந்தர் வாணாம் - கந்தர்வர்களின்
சதுர்விம்சத் - இருபத்து நான்கு
கோட்ய: - கோடிகள்
வஸந்தி - வசிக்கிறார்கள்.

पावकार्चिःप्रतीकाशाः समवेताः सहस्रशः ।
नात्यासादयितव्यास्ते वानरैर्भीमविक्रमैः ॥

பாவகார்சி: ப்ரதீகாஶா: ஸமவேதா: ஸஹஸ்ரஶ: ।
நாத்யாஸாதயிதவ்யாஸ்தே வானரைர் பீம விக்ரமை: ॥ 20

ஸஹஸ்ரஶ: - ஆயிரக்கணக்காய்
ஸமவேதா: - கூடியிருக்கிறவர்களும்
பாவ கார்சி: ப்ரதீகாஶா:- அக்னியை நிகர்த்தவர்களுமான
தே - அவர்கள்
பீம விக்ரமை: - மகா ஆண்மையுற்ற
வானரை: - வானரர்களால்
நாத்யா ஸாத யிதவ்யா:-கொஞ்சமும் அணுகத்தகாதவர்கள்.

नादेयं च फलं तस्माद्देशात् किञ्चित् प्लवङ्गमैः ।
दुरासदा हि ते वीराः सत्त्ववन्तो महाबलाः ॥

நாதேயம் ச பலம் தஸ்மாத் தேஶாத் கிஞ்சித் ப்லவங்கமை: ।
துராஸதா ஹி தே வீரா: ஸத்வவந்தோ மஹாபலா: ॥ 21

தஸ்மாத் - அந்த
தேஶாத் - தேசத்திலிருந்து
ப்லவங்கமை: - வானரர்களால்
கிஞ்சித் - ஏதாவதொரு
பலம் ச - பழமும்
ஆதேயம் ந - எடுக்கத்தக்கதன்று.
ஹி - ஏனெனில்
மஹாபலா: - மகா பலசாலிகளும்



ஸத்வ வந்த: - ஆண்மையுடையவர்களும்
வீரா: - சூரர்களுமான
தே - அவர்கள்
துராஸதா: - அணுக முடியாதவர்கள்.

फलमूलानि ते तत्र रक्षन्ते भीमविक्रमाः ।
तत्र यत्नश्च कर्तव्यो मार्गितव्या च जानकी ॥

பல மூலாநி தே தத்ர ரக்ஷந்தே பீமவிக்ரமா: ।
தத்ர யத்நஶ்ச கர்தவ்யோ மார்கிதவ்யா ச ஜானகீ ॥

न हि तेभ्यो भयं किञ्चित् कपित्वमनुवर्तताम् ॥

ந ஹி தேப்யோ பயம் கிஞ்சித் கபித்வமநுவர்த்ததாம் ॥ 23

பீமவிக்ரமா: - மகா ஆண்மையுடைய
தே - அவர்கள்
பலமூலாநி - பழங்களையும் கிழங்குகளையும்
ரக்ஷந்தே - பாதுகாக்கின்றார்கள்.
கபித்வம் - வானரத்தன்மையை
அநுவர்த்ததாம் - பற்றியிருக்கும் உங்களுக்கு
தேப்ய: - அவர்களிடமிருந்து
பயம் - பயம்
கிஞ்சித் ச - எள்ளளவும்
ந - இல்லை.
தத்ர ச - அவ்விடத்திலும்
ஜானகீ - ஸீதாதேவியார்
மார்கிதவ்யா - தேடப்பட வேண்டியவள்.
யத்ந: ஹி - வெகு ஜாக்கிரதையாகயிருத்தல்
கர்தவ்ய: - கொள்ளத்தக்கது.

तत्र वैदूर्यवर्णाभो वज्रसंस्थानसंस्थितः ।
नानाद्रुमलताकीर्णो वज्रो नाम महागिरिः ॥

தத்ர வைடூர்ய வர்ணாபோ வஜ்ரஸம்ஸ்தாந ஸம்ஸ்தித: ।
நாநாத்ருமலதாகீர்ணோ வஜ்ரோ நாம மஹாகிரி: ॥

श्रीमान् समुदितस्तत्र योजनानां शतं समम् ॥

ஶ்ரீமான் ஸமுதிதஸ்தத்ர யோஜநாநாம் ஶதம் ஸமம் ॥ 24

தத்ர - அவ்விடத்தில்
வைடூர்ய வர்ணாப:- வைடூரிய காந்தியை நிகர்த்ததும்
வஜ்ர ஸம்ஸ்தாந ஸம்ஸ்தித: - வஜ்ராயுதம் போன்ற உறுதியுள்ளதும்

நாநா த்ரும லதா கீர்ண: - பல மரங்களும் கொடிகளும் நிறைந்ததுமான
வஜ்ர: நாம - வஜ்ரமென்ற
மஹாகிரி: - ஒரு பர்வதமிருக்கிறது.
தத்ர - அந்த இடம்
ஶதம் யோஜநாநாம் - நூறு யோஜனைகள்
ஸமம் - ஸமமாய்
ஶ்ரீமான் - அழகுற்று
ஸமுதித: - விளங்குகிறது.

गुहास्तत्र विचेतव्याः प्रयत्नेन प्लवङ्गमाः ॥

குஹாஸ்தத்ர விசேதவ்யா: ப்ரயத்னேன ப்லவங்கமா: ॥ 25
ப்லவங்கமா: - வானரர்களே!
தத்ர - அவ்விடத்தில்
குஹா: - குகைகள்
ப்ரயத்னேன - ஜாக்கிரதையோடு
விசேதவ்யா: - தேடத்தக்கவைகள்.

चतुर्भागे समुद्रस्य चक्रवान्नाम पर्वतः ।

சதுர்பாகே ஸமுத்ரஸ்ய சக்ரவாந் நாம பர்வத: ॥ 26
ஸமுத்ரஸ்ய - சமுத்திரத்தின்
சதுர்பாகே - நான்காவது பாகத்திலே
சக்ரவாந் நாம - சக்கரவான் என்ற
பர்வத: - பர்வதமிருக்கிறது.

तत्र चक्रं सहस्रारं निर्मितं विश्वकर्मणा ॥

தத்ர சக்ரம் ஸஹஸ்ராரம் நிர்மிதம் விஶ்வகர்மணா ॥ 27
தத்ர - அதில்
ஸஹஸ்ராரம் - ஸகஸ்ராரமெனும்
சக்ரம் - சக்கரமானது
விஶ்வகர்மணா - விச்வகர்மாவால்
நிர்மிதம் - நிருமிக்கப்பட்டிருக்கிறது.

तत्र पञ्चजनं हत्वा हयग्रीवं च दानवम् ।
आजहार ततश्चक्रं शङ्खं च पुरुषोत्तमः ॥

தத்ர பஞ்சஜனம் ஹத்வா ஹயக்ரீவம் ச தானவம் ।
ஆஜஹார ததஶ்சக்ரம் ஶங்கம் ச புருஷோத்தம: ॥ 28
தத்ர ச - அவ்விடத்தில்தான்
புருஷோத்தம: - ஶ்ரீமஹாவிஷ்ணு



பஞ்சஜனம் - பஞ்சஜனன் என்ற அசுரனையும்,
ஹயக்ரீவம் - ஹயக்ரீவன் என்ற
தானவம் ச - அசுரனையும்
ஹத்வா - கொன்று,
தத: - அதன்மேல்
சக்ரம் - சக்கரத்தையும்
ஶங்கம் ச - சங்கையும்
ஆஜஹார - கைப்பற்றினார்.

तत्र सानुषु चित्रेषु विशालासु गुहासु च ।
रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥

தத்ர ஸாநுஷு சித்ரேஷு விஶாலாஸு குஹாஸு ச ।
ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ் ததஸ்தத: ॥ 29
தத்ர - அவ்விடத்தில்
சித்ரேஷு - அழகிய
ஸாநுஷு - தாழ்வரைகளிலும்
விஶாலாஸு: - பெரிய
குஹாஸு ச - குகைகளிலும்
ததஸ்தத: - எல்லாவிடங்களிலும்
ராவண: - ராவணன்
வைதேஹ்யா ஸஹ - ஸீதாதேவியோடுகூட
மார்கிதவ்யா - தேடத்தக்கவன்.

योजनानां ततः षष्टिर्वराहो नाम पर्वतः ।
सुवर्णशृङ्गः सुश्रीमानगाधे वरुणालये ॥

யோஜநாம் தத: ஷஷ்டிர்வராஹோ நாம பர்வத: ।
ஸுவர்ண ஶ்ருங்க: ஸுஶ்ரீமாநகாதே வருணாலயே ॥ 30
தத: - அதன்மேல்
அகாதே - மிக ஆழமான
வருணாலயே - சமுத்திரத்தில்
ஸுவர்ண ஶ்ருங்க: - பொற்கொடிமுடிகளையுடையதும்,
ஸுஶ்ரீமாந் - மிக அழகியதும்,
யோஜநாநாம் ஷஷ்டி: - அறுபது யோசனைகளுள்ள
வராஹ: நாம - வராகம் என்ற
பர்வத: - பர்வதம் இருக்கிறது.

तत्र प्राग्ज्योतिषं नाम जातरूपमयं पुरम् ।
यस्मिन् वसति दुष्टात्मा नरको नाम दानवः ॥

தத்ர ப்ராக்ஜ்யோதிஷம் நாம ஜாதரூபமயம் புரம் ।
யஸ்மின் வஸதி துஷ்டாத்மா நரகோ நாம தானவ: ॥ 31

தத்ர - அதில்
ஜாதரூப மயம் - பொன்மயமான
ப்ராக் ஜ்யோதிஷம் நாம - பிராக்ஜோதிஷம் என்ற
புரம் - ஒரு நகரமிருக்கிறது.
யஸ்மின் - (எதுவோ) அதில்
துஷ்டாத்மா - துஷ்டனான
நரக: நாம - நரகன் என்ற
தானவ: - அஸுரன்
வஸதி - வசிக்கிறான்.

**तत्र सानुषु रम्येषु काननेषु गुहासु च ।**
**रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥**

தத்ர ஸாநுஷு ரம்யேஷு காநநேஷு குஹாஸு ச ।
ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ்ததஸ்தத: ॥ 32

தத்ர - அவ்விடத்தில்
ஸாநுஷு - அழகிய
ரம்யேஷு - தாழ்வரைகளிலும்,
காநநேஷு - காடுகளிலும்,
குஹாஸு ச - குகைகளிலும்,
ததஸ்தத: - எல்லாவிடங்களிலும்
வைதேஹ்யா ஸஹ - ஸீதாதேவியோடுகூட
ராவண: - ராவணன்
மார்கிதவ்ய: - தேடத்தக்கவன்.

**तमतिक्रम्य शैलेन्द्रं काञ्चनान्तरनिर्दरः ।**
**पर्वतः सर्वसौवर्णो धाराप्रस्रवणायुतः ॥**

தமதிக்ரம்ய ஶைலேந்த்ரம் காஞ்சநாந்தரநிர்தர: ।
பர்வத: ஸர்வ ஸௌவர்ணோ தாராப்ரஸ்ரவணாயுத: ॥ 33

தம் - அந்த
ஶைலேந்த்ரம் - மலையரசை
அதிக்ரம்ய - தாண்டி,
காஞ்சநாந்தர நிர்தர: - பொன்மயமான உள்பிரதேசத்திலுள்ள குகைகளையுடையதும்
தாரா ப்ரஸ்ரவணாயுத: - எப்பொழுதும் பிரவாகமெடுத்தோடும் மலையருவிகளோடு கூடியதுமான
ஸர்வ ஸௌவர்ண: - ஸர்வஸௌவர்ணம் என்னும்
பர்வத: - ஒரு மலையிருக்கிறது.

**तं गजाश्च वराहाश्च सिंहा व्याघ्राश्च सर्वतः ।**
**अभिगर्जन्ति सततं तेन शब्देन दर्पिताः ॥**



தம் கஜாஶ்ச வராஹாஶ்ச ஸிம்ஹா வ்யாக்ராஶ்ச ஸர்வத: ।
அபிகர்ஜந்தி ஸததம் தேந ஶப்தேந தர்பிதா: ॥ 34

தம் - அதில்
ஸததம் - எக்காலத்திலும்
கஜா: ச - யானைகளும்,
வராஹா: ச - பன்றிகளும்,
ஸிம்ஹா: - சிங்கங்களும்,
வ்யாக்ரா: ச - புலிகளும்,
ஸர்வத: - எங்கும்
தர்பிதா: - செருக்குற்றவைகளாய்
தேந - அந்த
ஶப்தேந - சத்தத்தால்
அபிகர்ஜந்தி - கர்ஜிக்கின்றன.

**यस्मिन् हरिहयः श्रीमान् महेन्द्रः पाकशासनः ।**
**अभिषिक्तः सुरै राजा मेघवान्नाम पर्वतः ॥**

யஸ்மின் ஹரிஹய: ஶ்ரீமான் மஹேந்த்ர: பாகஶாஸன: ।
அபிஷிக்த: ஸுரை ராஜா மேகவான் நாம பர்வத: ॥ 35

யஸ்மின் - எந்த அதில்
ஹரிஹய: - பச்சைக் குதிரைகளையுடையவனும்
பாகஶாஸன: - பாகாஸுரனைக் கொன்றவனும்
ஶ்ரீமான் - ஶ்ரீமானுமாகிய
மஹேந்த்ர: - இந்திரன்
ஸுரை: - தேவர்களால்
ராஜா - மன்னனாக
அபிஷிக்த: - முடிசூட்டப்பட்டானோ
பர்வத: - அந்த மலை
மேகவான் - மேகவான்
நாம - எனப்பெயருடனும் வழங்கப்படுவதுண்டு.

**तमतिक्रम्य शैलेन्द्रं महेन्द्रपरिपालितम् ।**
**षष्टिं गिरिसहस्राणि काञ्चनानि गमिष्यथ ॥**

தமதிக்ரம்ய ஶைலேந்த்ரம் மஹேந்த்ர பரிபாலிதம் ।
ஷஷ்டிம் கிரிஸஹஸ்ராணி காஞ்சநாநி கமிஷ்யத ॥ 36

**तरुणादित्यवर्णानि भ्राजमानानि सर्वतः ।**
**जातरूपमयैर्वृक्षैः शोभितानि सुपुष्पितैः ॥**

தருணாதித்யவர்ணாநி ப்ராஜமாநாநி ஸர்வத: ।
ஜாத ரூப மயைர் வ்ருக்ஷை: ஶோபிதாநி ஸுபுஷ்பிதை: ॥ 37

மஹேந்த்ர பரிபாலிதம் - இந்திரனால் பரிபாலிக்கப்பட்ட
தம் - அந்த
ஶைலேந்த்ரம் - மலையரசை
அதிக்ரம்ய - தாண்டி,
காஞ்சநாநி - பொன்மயமானவைகளும்
தருணாதித்ய வர்ணாநி - இளஞ்சூரியனது ஒளிகொண்டு
ப்ராஜமாநாநி - விளங்குகிறவைகளும்
ஸர்வத: - எங்கும்
ஸுபுஷ்பிதை: - நன்கு பூத்த
ஜாதரூபமயை: - பொன்மயமான
வ்ருக்ஷை: - மரங்களால்
ஶோபிதாநி - அழகுற்று விளங்குகின்றவைகளுமான
ஷஷ்டிம் - அறுபது
கிரிஸஹஸ்ராணி - ஆயிரம் மலைகளை
கமிஷ்யத - அடைவீர்கள்.

तेषां मध्ये स्थितो राजा मेरुरुत्तरपर्वतः ।
आदित्येन प्रसन्नेन शैलो दत्तवरः पुरा ॥

தேஷாம் மத்யே ஸ்திதோ ராஜா மேருருத்தரபர்வத: ।
ஆதித்யேந ப்ரஸன்நேன ஶைலோ தத்தவர: புரா ॥ 38

தேஷாம் - அவைகளின்
மத்யே - நடுவில்
உத்தரபர்வத: - மிகச்சிறந்த பர்வதமும்
ராஜா - எல்லாவற்றிலும் பெரியதுமாகிய
மேரு: - மேருவெனும் பர்வதம் (இது வேறொரு மேருபர்வதம்)
ஸ்தித: - இருக்கிறது.
புரா - முன்னொருக்கால்
ஶைல: - பர்வதமானது
ப்ரஸன்னேன - உள்ளங்குளிர்ந்த
ஆதித்யேந - சூரியபகவானால்
தத்தவர: - பின்கண்ட வரத்தைப் பெற்றது.

तेनैवमुक्तः शैलेन्द्रः सर्व एव त्वदाश्रयाः ।
मत्प्रसादाद्भविष्यन्ति दिवा रात्रौ च काञ्चनाः ॥

தேநைவமுக்த: ஶைலேந்த்ர: ஸர்வ ஏவ த்வதாஶ்ரயா: ।
மத் ப்ரஸாதாத் பவிஷ்யந்தி திவா ராத்ரௌ ச காஞ்சனா: ॥ 39

ஶைலேந்த்ர: - மலையரசு
தேந - அவரால்



ஏவம் - பின்கண்டபடி
உக்த: - வரமளிக்கப்பட்டது.
த்வதாஶ்ரயா: - உன்னையடைந்திருக்கும்
ஸர்வ ஏவ - எல்லாருமே
திவா ராத்ரௌ ச - பகலிலும் இரவிலும்
காஞ்சனா: - பொன்னாக
மத் ப்ரஸாதாத் - என்னுடைய அருளினால்
பவிஷ்யந்தி - ஆகக்கடவர்கள்.

त्वयि ये चापि वत्स्यन्ति देवगन्धर्वदानवाः ।
ते भविष्यन्ति रक्ताश्च प्रभया काञ्चना इव ॥

த்வயி யே சாபி வத்ஸ்யந்தி தேவகந்தர்வதானவா: ।
தே பவிஷ்யந்தி ரக்தாஶ்ச ப்ரபயா காஞ்சன இவ ॥ 40

யே - எந்த
தேவ கந்தர்வ தானவா: ச - தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும்
த்வயி - உன்மீது
வத்ஸ்யந்தி அபி - வசிக்கின்றார்களோ
தே ச - அவர்களும்
ப்ரபயா - ஒளியால்
காஞ்சனா: இவ - பொன்னென
ரக்தா: - சிவந்தவர்களாய்
பவிஷ்யந்தி - இருப்பார்கள்.

विश्वेदेवाश्च मरुतो वसवश्च दिवौकसः ।
आगम्य पश्चिमां सन्ध्यां मेरुमुत्तरपर्वतम् ॥

விச்வே தேவாஶ்ச மருதோ வஸவஶ்ச திவௌகஸ: ।
ஆகம்ய பஶ்சிமாம் ஸந்த்யாம் மேருமுத்தரபர்வதம்॥ 41

आदित्यमुपतिष्ठन्ति तैश्च सूर्योऽभिपूजितः ।
अदृश्यः सर्वभूतानामस्तं गच्छति पर्वतम् ॥

ஆதித்ய முபதிஷ்டந்தி தைஶ்ச ஸூர்யோऽபிபூஜித: ।
அத்ருஶ்ய: ஸர்வ பூதாநாமஸ்தம் கச்சதி பர்வதம் ॥ 42

விஶ்வே தேவா: ச - விச்வேதேவர்களும்,
மருத: - மருத்துக்களும்,
வஸவ: ச - வஸுக்களும்,
திவௌகஸ: - தேவர்களும்,
உத்தரபர்வதம் - சிறந்த பர்வதமாகிய
மேரு - மேருவுக்கு

ஆகம்ய - வந்து,
ஆதித்யம் - சூரியபகவானை
பஶ்சிமாம் - சாயங்கால
ஸந்த்யாம் - சந்தியில்
உபதிஷ்டந்தி - பூஜிக்கின்றார்கள்.
தை: - அவர்களால்
அபிபூஜித: - பூஜிக்கப்பட்ட
ஸூர்ய: - சூரியபகவான்
ஸர்வ பூதாநாம் ச - பிராணிகளெவைகளுக்கும்
அத்ருஶ்ய: - கட்புலனாகாதவராய்
அஸ்தம் - அஸ்தமன
பர்வதம் - கிரியை
கச்சதி - அடைகிறான்.

**योजनानां सहस्राणि शतानि च दिवाकरः ।**
**मुहूर्तार्धेन तं शीघ्रमस्तं याति शिलोच्चयम् ॥**

யோஜநாநாம் ஸஹஸ்ராணி ஶதானி திவாகர: ।
முஹூர்தார்தேந தம் ஶீக்ரமஸ்தம் யாதி ஶிலோச்சயம் ॥ 43
திவாகர: - சூரியபகவான்
தம் - அந்த
அஸ்தம் ஶிலோச்சயம்- சிறந்த அஸ்தமன மலையை
முஹூர்தார்தேந - அரை முகூர்த்தத்திற்குள்ளேயே
யோஜநாநாம் - யோஜனைகளின்
ஶதானி - நூறு
ஸஹஸ்ராணி ச - ஆயிரங்களையும்
ஶீக்ரம் - விரைவில்
யாதி - கடந்தடைகிறான்.

**शृङ्गे तस्य महद्दिव्यं भवनं सूर्यसंनिभम् ।**
**प्रासादगणसंबाधं विहितं विश्वकर्मणा ॥**

ஶ்ருங்கே தஸ்ய மஹத்திவ்யம் பவனம் ஸூர்யஸந்நிபம் ।
ப்ராஸாத கணஸம்பாதம் விஹிதம் விஶ்வகர்மணா ॥ 44

**शोभितं तरुभिश्चित्रैर्नानापक्षिसमाकुलैः ।**
**निकेतं पाशहस्तस्य वरुणस्य महात्मनः ॥**

ஶோபிதம் தருபிஶ்சித்ரைர் நாநாபக்ஷி ஸமாகுலை: ।
நி கேதம் பாஶஹஸ் தஸ்ய வருணஸ்ய மஹாத்மன: ॥ 45
தஸ்ய - அதன்
ஶ்ருங்கே - கொடுமுடியில்



மஹத் - பெரியதும்
திவ்யம் - அழகானதும்.
ஸூர்ய ஸந்நிபம் - சூரியனை நிகர்த்ததும்
ப்ராஸாத கண ஸம்பாதம்-பல மாளிகைகளால் நிறைந்துள்ளதும்
விஶ்வகர்மணா - விச்வகர்மாவினால்
விஹிதம் - நிர்மிக்கப்பட்டதும்
சித்ரை: - அழகிய
நாநா பக்ஷி ஸமாகுலை: - பலவித பக்ஷிகளால் நிறைந்த
தருபி: - மரங்களால்
ஶோபிதம் - அழகுவாய்ந்து விளங்குகிறதும்
மஹாத்மன: - மகாத்மாவும்
பாஶஹஸ்தஸ்ய - பாசஹஸ்தனுமான
வருணஸ்ய - வருண பகவானுடைய
நிகேதம் - இருப்பிடமுமான
பவனம் - ஒரு மாளிகை இருக்கிறது.

**अन्तरा मेरुमस्तं च तालो दशशिरा महान् ।**
**जातरूपमयः श्रीमान् भ्राजते चित्रवेदिकः ॥**

அந்தரா மேருமஸ்தம் ச தாலோ தஶஶிரா மஹான் ।
ஜாத ரூபமய: ஶ்ரீமான் ப்ராஜதே சித்ரவேதிக: ॥ 46
மேரும் - மேருகிரிக்கும்
அஸ்தம் ச - அஸ்தமனகிரிக்கும்
அந்தரா - இடையில்
தஶஶிரா: - பத்துக் கிளைகளையுடையதும்
ஜாதரூபமய: - பொன்மயமானதுமான
மஹான் - பெரிய
தால: - ஒரு பனைமரம்
சித்ர வேதிக: - அழகிய திண்ணையின் மீது கட்டப்பட்டதாய்
ஶ்ரீமான் - அழகுற்றதாய்
ப்ராஜதே - விளங்குகிறது.

**तेषु सर्वेषु दुर्गेषु सरःसु च सरित्सु च ।**
**रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥**

தேஷு ஸர்வேஷு துர்கேஷு ஸரஸ்ஸு ச ஸரித்ஸு ச ।
ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ்ததஸ்தத: ॥ 47
தேஷு - அந்த
துர்கேஷு - துர்க்கங்கள்
ஸர்வேஷு - எல்லாவற்றிலும்
ஸரஸ்ஸு ச - பொய்கைகளிலும்

ஸரித்ஸு ச - நதிகளிலும்
ததஸ்தத: - எல்லாவிடங்களிலும்
ராவண: - ராவணன்
வைதேஹ்யா ஸஹ - ஸீதாதேவியோடுகூட
மார்கிதவ்ய: - தேடத்தக்கவன்.

**यत्र तिष्ठति धर्मात्मा तपसा स्वेन भावितः ।**
**मेरुसावर्णिरित्येव ख्यातो वै ब्रह्मणा समः ॥**

**யத்ர திஷ்டதி தர்மாத்மா தபஸா ஸ்வேந பாவித: ।**
**மேரு ஸாவர்ணிரித்யேவ க்யாதோ வை ப்ரஹ்மணா ஸம: ॥** 48

யத்ர - எந்த இதில்
ப்ரஹ்மணா - பிரம்மதேவரை
ஸம: - ஒத்தவரும்
தர்மஜ்ஞ: - தர்மமறிந்தவரும்
ஸ்வேந - தனது
தபஸா - தவமகிமையால்
பாவித: ஏவ - பிரசித்தி பெற்றவருமான
மேரு ஸாவர்ணி: - மேருஸாவர்ணி
இதி வை - என்று
க்யாத: - பெயர் பெற்றவர்
திஷ்டதி - இருக்கிறார்.

**प्रष्टव्यो मेरुसावर्णिर्महर्षिः सूर्यसंनिभः ।**
**प्रणम्य शिरसा भूमौ प्रवृत्तिं मैथिलीं प्रति ॥**

**ப்ரஷ்டவ்யோ மேருஸாவர்ணிர் மஹர்ஷி: ஸூர்ய ஸந்நிப :।**
**ப்ரணம்ய ஶிரஸா பூமௌ ப்ரவ்ருத்திம் மைதிலீம் ப்ரதி ॥** 49

ஸூர்ய ஸந்நிப: - சூரியபகவானை நிகர்த்த
மஹர்ஷி: - முனிவர்பெருமானான
மேருஸாவர்ணி: - மேருஸாவர்ணி
பூமௌ - தரையில்
ஶிரஸா - தலையால்
ப்ரணம்ய - வணங்கி நமஸ்கரித்து,
மைதிலீம் ப்ரதி - மைதிலியாரைப் பற்றிய
ப்ரவ்ருத்திம் - நீங்கள் எடுத்துக் கொள்ளவேண்டிய முயற்சியைப்பற்றி
ப்ரஷ்டவ்ய: - கேட்கப்படவேண்டியவர்.

**एतावज्जीवलोकस्य भास्करो रजनीक्षये ।**
**कृत्वा वितिमिरं सर्वमस्तं गच्छति पर्वतम् ॥**



**ஏதாவஜ் ஜீவலோகஸ்ய பாஸ்கரோ ரஜநீக்ஷயே ।**
**க்ருத்வா விதிமிரம் ஸர்வமஸ்தம் கச்சதி பர்வதம்॥** 50

பாஸ்கர: - சூரியன்
ஜீவலோகஸ்ய - உலகிற்கு
ஏதாவத் - இதுவரையுமுள்ள
ஸர்வம் - எல்லாவற்றையும்
ரஜநீக்ஷயே - இரவு கழிந்தபொழுது
விதிமிரம் - இருளற்றதாக
க்ருத்வா - செய்துவிட்டு,
அஸ்தம் - அஸ்தமன
பர்வதம் - கிரியை
கச்சதி - அடைகிறான்.

**एतावद्वानरैः शक्यं गन्तुं वानरपुंगवाः ।**
**अभास्करममर्यादं न जानीमस्ततः परम् ॥**

**ஏதாவத் வாநரை: ஶக்யம் கந்தும் வானர புங்கவா: ।**
**அபாஸ்கரமமர்யாதம் ந ஜாநீமஸ்தத: பரம் ॥** 51

வானரபுங்கவா: - வானரோத்தமர்களே!
வாநரை: - வானரர்களால்
ஏதாவத் - இதுவரையில்தான்
கந்தும் - போக
ஶக்யம் - முடியும்.
அபாஸ்கரம் - சூரியனில்லாததும்
அமர்யாதம் - எல்லையில்லாததுமான
தத: பரம் - அதற்குமேல்
ந ஜாநீம: - நாமறியோம்.

**अधिगम्य तु वैदेहीं निलयं रावणस्य च ।**
**अस्तं पर्वतमासाद्य पूर्णे मासे निवर्तत ॥**

**அதிகம்ய து வைதேஹீம் நிலயம் ராவணஸ்ய ச ।**
**அஸ்தம் பர்வத மாஸாத்ய பூர்ணே மாஸே நிவர்தத ॥** 52

அஸ்தம் பர்வதம் - அஸ்தமன பர்வதம் வரை
ஆஸாத்ய - சென்று,
ராவணஸ்ய - ராவணனுடைய
நிலயம் - இருப்பிடத்தையும்
வைதேஹீம் து - வைதேகியாரைப் பற்றியும்
அதிகம்ய - ஸமாசாரம் தெரிந்துகொண்டு,
மாஸே - ஒரு மாதம்
பூர்ணே - முடியுமுன்
நிவர்தத - திரும்பி வந்துசேருங்கள்.

ऊर्ध्वं मासान्न वस्तव्यं वसन् वध्यो भवेन्मम ॥

ஊர்த்வம் மாஸாந்ந வஸ்தவ்யம் வஸன் வத்யோ பவேன்மம ॥ 53

| | | |
|---|---|---|
| மாஸாத் ஊர்த்வம் | - | ஒரு மாதத்திற்குமேல் |
| வஸ்தவ்யம் ந | - | தாமதிக்கக்கூடாது. |
| வஸன் | - | அப்படித் தாமதிப்பவன் |
| மம | - | என்னுடைய |
| வத்ய: | - | மரண தண்டனை விதிக்கப்பட்டவனாக |
| பவேத் | - | ஆவான். |

सहैव शूरो युष्माभिः श्वशुरो मे गमिष्यति ।
श्रोतव्यं सर्वमेतस्य भवद्भिर्दिष्टकारिभिः ॥

ஸஹைவ ஶூரோ யுஷ்மாபி: ஶ்வஶுரோ மே கமிஷ்யதி ।
ஶ்ரோதவ்யம் ஸர்வமேதஸ்ய பவத் பிர்திஷ்டகாரிபி: ॥ 54

| | | |
|---|---|---|
| யுஷ்மாபி: ஸஹ ஏவ | - | உங்களோடு கூடவே |
| ஶூர: | - | சூரராகிய |
| மே ஶ்வஶுர: | - | என்து மாமனார் |
| கமிஷ்யதி | - | வருவார். |
| திஷ்டகாரிபி: | - | மனங்கோணாது நடக்கின்றவர்களாகிய |
| பவத்பி: | - | உங்களால் |
| ஏதஸ்ய | - | இவருடைய |
| ஸர்வம் | - | ஆக்ஞை எதுவும் |
| ஶ்ரோதவ்யம் | - | சொன்னபடி செய்யத்தக்கது. |

गुरुरेष महाबाहुः श्वशुरो मे महाबलः ।
भवन्तश्चापि विक्रान्ताः प्रमाणं सर्वकर्मसु ॥

குருரேஷ மஹாபாஹு: ஶ்வஶுரோ மே மஹாபல: ।
பவந்தஶ்சாபி விக்ராந்தா: ப்ரமாணம் ஸர்வகர்மஸு ॥ 55

| | | |
|---|---|---|
| மஹாபல: | - | மகா பலசாலியும் |
| மஹாபாஹு: | - | மகாபாகுவும் |
| குரு: | - | பெரியவரும் |
| மே | - | எனது |
| ஶ்வஶுர: | - | மாமனாருமான |
| ஏஷ: ச | - | இவரும் |
| விக்ராந்தா: | - | பராக்கிரமசாலிகளாகிய |
| பவந்த: அபி | - | நீங்களும் |
| ஸர்வ கர்மஸு | - | எல்லாக் காரியங்களிலும் |
| ப்ரமாணம் | - | நியமிக்கப்பட்ட கருவி. |

प्रमाणमेनं संस्थाप्य सर्वतः पश्चिमां दिशम् ।
भवन्तः परिपश्यन्तु यथा दृश्येत जानकी ॥



ப்ரமாண மேனம் ஸம்ஸ்தாப்ய ஸர்வத: பஶ்சிமாம் திஶம் ।
பவந்த: பரிபஶ்யந்து யதா த்ருஶ்யேத ஜானகீ ॥ 56

| | | |
|---|---|---|
| ஜானகீ | - | ஜானகியார் |
| யதா | - | எப்படிச் செய்தால் |
| த்ருஶ்யேத | - | காணப்படுவாரோ அப்படியே |
| ஏனம் | - | இவரை |
| ப்ரமாணம் | - | மேலதிகாரியாய் |
| ஸம்ஸ்தாப்ய | - | வைத்துக்கொண்டு, |
| பஶ்சிமாம் | - | மேற்கு |
| திஶம் | - | திக்கில் |
| ஸர்வத: | - | எங்கும் |
| பவந்த: | - | நீங்கள் |
| பரிபஶ்யந்து | - | ஜாக்கிரதையாய்த் தேடக்கடவீர்கள். |

दृष्टायां तु नरेन्द्रस्य पत्न्याममिततेजसः ।
कृतकृत्या भविष्यामः कृतस्य प्रतिकर्मणा ॥

த்ருஷ்டாயாம் து நரேந்த்ரஸ்ய பத்ந்யாமமித தேஜஸ: ।
க்ருதக்ருத்யா பவிஷ்யாம: க்ருதஸ்ய ப்ரதிகர்மணா ॥ 57

| | | |
|---|---|---|
| அமித தேஜஸ: | - | மகா தேஜஸ்வியாகிய |
| நரேந்த்ரஸ்ய | - | புருஷோத்தமனுடைய |
| பத்ந்யாம் | - | பத்னி |
| த்ருஷ்டாயாம் து | - | காணப்படும் பக்ஷத்தில் |
| க்ருதஸ்ய | - | செய்த நன்றிக்கு |
| ப்ரதிகர்மணா | - | ஏற்ற கைம்மாறால் |
| க்ருத க்ருத்யா: | - | கிருதகிருத்யர்களாக |
| பவிஷ்யாம: | - | நாம் ஆவோம். |

अतोऽन्यदपि यत्किञ्चित् कार्यस्यास्य हितं भवेत् ।
संप्रधार्य भवद्भिश्च देशकालार्थसंहितम् ॥

அதோऽன்யதபி யத்கிஞ்சித் கார்யஸ்யாஸ்ய ஹிதம் பவேத் ।
ஸம் ப்ரதார்ய பவத்பிஶ்ச தேஶகாலார்தஸம்ஹிதம் ॥ 58

| | | |
|---|---|---|
| அத: | - | இதைக் காட்டிலும் |
| யத் கிஞ்சித் | - | ஏதேனுமொரு |
| அன்யத் | - | வேறொன்று |
| அஸ்ய | - | இந்த |
| கார்யஸ்ய | - | நமது காரியத்திற்கு |
| ஹிதம் | - | ஹிதமானதாக |
| பவேத் அபி | - | ஆகுமாயின் |
| பவத்பி: | - | உங்களால் |

தேஶ காலார்த - தேசம், காலம், அர்த்தம், இவைகளுக்கு
ஸம்ஹிதம் - ஏற்றவண்ணமாய்
ஸம்ப்ரதார்ய - தீர்க்காலோசனை செய்து,
ச - அப்படியே செய்யத்தக்கது.

**ततः सुषेणप्रमुखाः प्लवङ्गमाः सुग्रीववाक्यं निपुणं निशम्य ।**
**आमन्त्र्य सर्वे प्लवगाधिपास्ते जग्मुर्दिशं तां वरुणाभिगुप्ताम् ॥**

தத: ஸுஷேண ப்ரமுகா: ப்லவங்கமா:
ஸுக்ரீவ வாக்யம் நிபுணம் நிஶம்ய ।
ஆமந்த்ர்ய ஸர்வே ப்லவகாதிபா: தே
ஜக்முர்திஶம் தாம் வருணாபி குப்தாம் ॥ 59

தத: - அப்பொழுது
தே - அந்த
ஸுஷேண ப்ரமுகா: - சுஷேணனைத் தலைமையாகக் கொண்டவர்களும்
ப்லவகாதிபா: - வானரப்பெரியோர்களுமான
ப்லவங்கமா: - வானரர்கள்
ஸர்வே - எல்லோரும்
நிபுணம் - யுக்தியுக்தமான
ஸுக்ரீவ வாக்யம் - ஸுக்ரீவனது சொல்லை
நிஶம்ய - கேட்டு,
ஆமந்த்ர்ய - விடைபெற்றுக்கொண்டு,
வருணாபி குப்தாம் - வருணனால் பாதுகாக்கப்பட்ட
தாம் - அந்த
திஶம் - திக்குக்கு
ஜக்மு: - பிரயாணமானார்கள்.

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே*
*ப்ரதீசீப்ரேஷணம் நாம த்விசத்வாரிம்ஶ: ஸர்க: ॥*



**த்ரிசத்வாரிம்ஶ: ஸர்க: - 43**

**ततः संदिश्य सुग्रीवः श्वशुरं पश्चिमां दिशम् ।**
**वीरं शतबलिं नाम वानरं वानराधिपः ॥**

தத: ஸந்திஶ்ய ஸுக்ரீவ: ஶ்வஶுரம் பஶ்சிமாம் திஶம் ।
வீரம் ஶதபலிம் நாம வானரம் வாநராதிப: ॥ 1

**उवाच राजा सर्वज्ञः सर्ववानरसत्तमः ।**
**वाक्यमात्महितं चैव रामस्य च हितं तथा ॥**

உவாச ராஜா ஸர்வக்ஞ: ஸர்வ வானரஸத்தம: ।
வாக்யமாத்மஹிதம் சைவ ராமஸ்ய ச ஹிதம் ததா ॥ 2

வானராதிப: - வானரர்களுக்கு எஜமானும்
ஸர்வக்ஞ: - எல்லா விவரங்களையும் நன்கறிந்தவனும்
ஸர்வ வானர ஸத்தம: - எல்லா வானரர்களிலும் உத்தமனுமான
ஸுக்ரீவ: ராஜா - சுக்ரீவமன்னன்
ஶ்வஶுரம் - மாமனாரை
பஶ்சிமாம் திஶம் - மேற்குதிக்குக்கு
ஸந்திஶ்ய - கட்டளையிட்டுவிட்டு,
தத: - அதன்மேல்
வீரம் - சூரனான
ஶதபலிம் நாம - சதபலி என்ற
வானரம் - வானரனைப் பார்த்து
ஆத்மஹிதம் ச - தனக்கு நன்மை பயக்கத்தக்கதும்
ததா - அப்படியே
ராமஸ்ய ச - ஸ்ரீராமருக்கும்
ஹிதம் ஏவ - நன்மை பயக்கத்தக்கதுமான
வாக்யம் - பின்வரும் சொல்லை
உவாச - சொன்னான்.

**वृतः शतसहस्रेण त्वद्विधानां वनौकसाम् ।**
**वैवस्वतसुतैः सार्धं प्रतिष्ठस्व स्वमन्त्रिभिः ॥**

வ்ருத: ஶதஸஹஸ்ரேண த்வத்விதாநாம் வனௌகஸாம் ।
வைவஸ்வத ஸுதை: ஸார்தம் ப்ரதிஷ்டஸ்வ ஸ்வமந்த்ரிபி: ॥ 3

த்வத்விதாநாம் - உன்னைப்போன்ற
வனௌகஸாம் - வானரர்களின்
ஶத ஸஹஸ்ரேண - லக்ஷம் பேர்களால்
வ்ருத: - சூழப்பட்டவனாயும்

வைவஸ்வத ஸுதை:- யமபுத்திரர்களான
ஸ்வமந்த்ரிபி: - தனது மந்திரிகளோடு
ஸார்தம் - கூட
ப்ரதிஷ்டஸ்வ - புறப்படு.

**दिशं ह्युदीचीं विक्रान्तां हिमशैलावतंसकाम् ।**
**सर्वतः परिमार्गध्वं रामपत्नीमनिन्दिताम् ॥**

திஶம் ஹ்யுதீசீம் விக்ராந்தாம் ஹிமஶைலாவதம்ஸகாம் ।
ஸர்வத: பரிமார்கத்வம் ராம பத்நீமநிந்தி தாம் ॥ 4

விக்ராந்தாம் - மிக விசாலமானதும்
ஹிம ஶைலாவதம் - இமயமலையை மகுடமாய்
ஸகாம் ஹி கொண்டதுமான
உதீசீம் - வடக்கு
திஶம் - திக்கில்
ஸர்வத: - எல்லா இடங்களிலும்
அநிந்திதாம் - குற்றமில்லாதவளான
ராமபத்நீம் - ஸ்ரீராமருடைய பத்னியை
பரிமார்கத்வம் - நன்கு தேடக்கடவீர்களாக.

**अस्मिन् कार्ये विनिर्वृत्ते कृते दाशरथेः प्रिये ।**
**ऋणान्मुक्ता भविष्यामः कृतार्थार्थविदां वराः ॥**

அஸ்மின் கார்யே விநிர்வ்ருத்தே க்ருதே தாஶரதே: ப்ரியே ।
ருணான் முக்தா பவிஷ்யாம: க்ருதார்தார்த விதாம் வரா: ॥ 5

தாஶரதே: - ஸ்ரீராமருடைய
ப்ரியே - இஷ்டம்
க்ருதே - கைகூடப்பெற்று
அஸ்மின் - இந்த
கார்யே - காரியம்
விநிர்வ்ருத்தே - பூர்த்தியாகில்
ருணாத் - கடனினின்று
முக்தா: - நீங்கியவர்களாய்
க்ருதார்தார்த விதாம் - கிருதார்த்தர்களுடைய பயனின் நுட்பத்தை அறிந்தவர்களில்
வரா: - சிறந்தவர்களாய்
பவிஷ்யாம: - ஆகுவோம்.

**कृतं हि प्रियमस्माकं राघवेण महात्मना ।**
**तस्य चेत्प्रतिकारोऽस्ति सफलं जीवितं भवेत् ॥**



க்ருதம் ஹி ப்ரியமஸ்மாகம் ராகவேண மஹாத்மநா ।
தஸ்யசேத் ப்ரதி காரோऽஸ்தி ஸபலம் ஜீவிதம் பவேத் ॥ 6

மஹாத்மநா - மகாத்மாவான
ராகவேண - ஸ்ரீராமரால்
அஸ்மாகம் - நமக்கு
ப்ரியம் - பேருதவி
க்ருதம் - செய்யப்பட்டிருக்கிறது.
ஹி - ஆனபடியால்
தஸ்ய - அவருக்கு
ஏதத் - இது
ப்ரதிகார: - ஏற்ற கைமாறாக
அஸ்தி - இருக்கிறது.
ஜீவிதம் - வாழ்நாள்
ஸபலம் - பயனடைந்ததாக
பவேத் - ஆகும்.

**अर्थिनः कार्यनिर्वृत्तिमकर्तुरपि यश्चरेत् ।**
**तस्य स्यात् सफलं जन्म किं पुनः पूर्वकारिणः ॥**

அர்தின: கார்யநிர்வ்ருத்தி மகர்துரபி யஶ்சரேத் ।
தஸ்ய ஸ்யாத் ஸபலம் ஜன்ம கிம் புன: பூர்வகாரிண: ॥ 7

ய: - எவனொருவன்
அகர்து: - ஒரு உதவியும் செய்யாது
அர்தின: - யாசிக்குமொருவனுக்கு
கார்ய நிர்வ்ருத்திம் - அபேக்ஷிதத்தின் பூர்த்தியை
சரேத் அபி - விளைவிக்கின்றான் என்றால்
தஸ்ய - அவனுடைய
ஜன்ம - ஜன்மம்
ஸபலம் - பயனடைந்ததாக
ஸ்யாத் - ஆகும்.
பூர்வகாரிண: - ஏற்கனவே நன்றி செய்தவனுக்கு என்றால்
கிம் புன: - எவளவு பயனடைந்ததாகும்.

**एतां बुद्धिं समास्थाय दृश्यते जानकी यथा ।**
**तथा भवद्भिः कर्तव्यमस्मत्प्रियहितैषिभिः ॥**

ஏதாம் புத்திம் ஸமாஸ்தாய த்ருஶ்யதே ஜானகீ யதா ।
ததா பவத்பி: கர்தவ்ய மஸ்மத் ப்ரியஹிதைஷிபி: ॥ 8

அஸ்மத் ப்ரியஹிதைஷிபி:- எனக்குப் பிரியத்தையும் ஹிதத்தையும் கோரும்
பவத்பி: - உங்களால்
ஏதாம் - இந்த

புத்திம் - அபிப்பிராயத்தை
அவஸ்தாய - ஸ்திரமாய்க்கொண்டு,
ஜானகீ - ஜானகீதேவியார்
யதா - எப்படிச்செய்தால்
த்ருஶ்யதே - கண்டுபிடிக்கப்படுவாளோ,
ததா - அவ்வண்ணமே
கர்தவ்யம் - செய்யத்தக்கது.

**अयं हि सर्वभूतानां मान्यस्तु नरसत्तमः ।**
**अस्मासु चागतप्रीती रामः परपुरंजयः ॥**

அயம் ஹி ஸர்வபூதாநாம் மான்யஸ்து நரஸத்தம: ।
அஸ்மாஸு சாகதப்ரீதீ ராம: பரபுரஞ்ஜய: ॥ 9

அயம் - இந்த
ராம: ஹி - ஸ்ரீராமரோவெனில்
நரஸத்தம: - புருஷோத்தமர்,
ஸர்வபூதாநாம் - எல்லா உயிர்களுக்குள்ளும்
மான்ய: - பூஜ்யர்,
அஸ்மாஸு து - நமது விஷயத்திலோ
ஆகத ப்ரீதி: - பேரன்புவைத்தவர்,
ச - அன்றியும்
பரபுரஞ்ஜய: - எதிலும்தானே வெற்றிபெற்று விளங்குகிறவர்.

**इमानि वनदुर्गाणि नद्यः शैलान्तराणि च ।**
**भवन्तः परिमार्गन्तु बुद्धिविक्रमसंपदा ॥**

இமானி வன துர்காணி நத்ய: ஶைலாந்தராணி ச ।
பவந்த: பரிமார்கந்து புத்திவிக்ரம ஸம்பதா ॥ 10

பவந்த: - நீங்கள்
புத்தி விக்ரம ஸம்பதா - ஊக்கத்தையும் ஆண்மையையும் கொண்டு
வன துர்காணி - வனங்கள், துர்க்கங்கள்,
நத்ய: - நதிகள்,
ஶைலாந்தராணி ச - மலைப்பிரதேசங்கள் ஆகிய
இமானி - இவைகளில்
பரிமார்கந்து - திரிந்து தேடுங்கள்.

**तत्र म्लेच्छान् पुलिन्दांश्च शूरसेनांस्तथैव च ।**
**प्रस्थलान् भरतांश्चैव कुरूंश्च सह मद्रकैः ॥**

தத்ர ம்லேச்சான் புலிந்தான் ச ஶூரஸேநாந் ததைவ ச ।
ப்ரஸ்தலான் பரதான் சைவ குரூம்ஶ்ச ஸஹ மத்ரகை: ॥ 11



**काम्बोजान् यवनांश्चैव शकानारट्टकानपि ।**
**बाह्लीकानृषिकांश्चैव पौरवानथ टङ्कणान् ॥**

காம் போஜான் யவநாந்ஶ்சைவ ஶகாநாரட்டகாநபி ।
பாஹ்லீகான் ரிஷிகான்ஶ்சைவ பௌரவாநத டங்கணான் ॥ 12

**चीनान् परमचीनांश्च नीहारांश्च पुनः पुनः ।**
**अन्विष्य दरदांश्चैव हिमवन्तं विचिन्वथ ॥**

சீநாந் பரம சீநாம்ஶ்ச நீஹாராம்ஶ்ச புன: புன: ।
அன்விஷ்ய தரதாம்ஶ்சைவ ஹிமவந்தம் விசின்வத ॥ 13

தத்ர - அவ்விடத்தில்
ம்லேச்சான் - மிலேச்ச நாடுகளையும்,
புலிந்தான் ச - புளிந்த நாடுகளையும்,
ததா - அப்படியே
ஶூரஸேநாந் ச ஏவ - சூரஸேன நாடுகளையும்,
ப்ரஸ்தலான் ச - பிரஸ்தல நாடுகளையும்,
பரதான் ஏவ - பரத நாடுகளையும்,
மத்ரகை: ஸஹ - மத்ரகமென்ற நாடுகளோடு கூடவே
குரூந் ச - குருநாடுகளையும்,
காம்போஜான் ச - காம்போஜ நாடுகளையும்,
யவநாந் ஏவ - யவனநாடுகளையும்,
ஶகாந் - சகநாடுகளையும்,
ஆரட்டகாந் அபி - ஆரட்டக நாடுகளையும்,
பாஹ்லீகான் ச - பாஹ்லீக நாடுகளையும்,
ரிஷிகான் ஏவ - ரிஷிக நாடுகளையும்,
பௌரவாந் அத - பௌரவ நாடுகளையும்,
டங்கணான் ச - டங்கண நாடுகளையும்,
சீநாந் - சீன நாடுகளையும்,
பரம சீநான் ச - பரமசீன நாடுகளையும்,
நீஹாரான் ச - நீஹார நாடுகளையும்,
தரதான் ச - தரத நாடுகளையும்,
புன: புன: - துருவித்துருவி
அன்விஷ்ய ஏவ - தேடிவிட்டே,
ஹிமவந்தம் - இமயமலையில்
விசின்வத - தேடக்கடவீராக.

**लोध्रपद्मकषण्डेषु देवदारुवनेषु च ।**
**रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥**

லோத்ரபத்மகஷண்டேஷு தேவதாருவனேஷு ச ।
ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ்ததஸ்தத: ॥ 14

லோத்ர பத்மக - வள்ளொலுத்தி, சந்தனம், இவைகளின்
ஷண்டேஷு வனங்களிலும்,
தேவதாரு வனேஷு - தேவதாரு வனங்களிலும்,
ததஸ்தத: - எல்லாவிடங்களிலும்
ராவண: - ராவணன்
வைதேஹ்யா ஸஹ - ஸீதாதேவியோடுகூட
மார்கிதவ்ய: - தேடத்தக்கவன்.

**ततः सोमाश्रमं गत्वा देवगन्धर्वसेवितम् ।**
**कालं नाम महासानुं पर्वतं तं गमिष्यथ ॥**

**தத: ஸோமாஶ்ரமம் கத்வா தேவகந்தர்வஸேவிதம் ।**
**காலம் நாம மஹாஸாநும் பர்வதம் தம் கமிஷ்யத ॥** 15

தேவ கந்தர்வ ஸேவிதம் - தேவர்களும், கந்தர்வர்களும் வஸிக்கப்பட்டதான
ஸோமாஶ்ரமம் - ஸோமாச்ரமத்தை
கத்வா - அடைந்து,
தத: - அதன் பின்னர்
மஹாஸாநும் - பெரிய தாழ்வரைகளையுடைய
காலம் - காலம்
நாம - என்ற
பர்வதம் து - பர்வதத்தையும்
கமிஷ்யத - அடையக்கடவீர்.

**महत्सु तस्य शृङ्गेषु निर्दरेषु गुहासु च ।**
**विचिनुध्वं महाभागां रामपत्नीं ततस्ततः ॥**

**மஹத்ஸு தஸ்ய ஶ்ருங்கேஷு நிர்தரேஷு குஹாஸு ச ।**
**விசிநுத்வம் மஹாபாகாம் ராமபத்நீம் ததஸ்தத: ॥** 16

தஸ்ய - அந்த
ஶைலஸ்ய - மலையின்
மஹத்ஸு - பெரிய
நிர்தரேஷு - அருவுகளிலும்,
குஹாஸு ச - குகைகளிலும்
மஹாபாகாம் - மஹா புண்யவதியாகிய
ராம பத்நீம் - ஸ்ரீராமரது பத்னியை
ததஸ்தத: - எங்கும்
விசிநுத்வம் - தேடக்கடவீர்.

**तमतिक्रम्य शैलेन्द्रं हेमगर्भं महागिरिम् ।**
**ततः सुदर्शनं नाम गन्तुमर्हथ पर्वतम् ॥**

**தமதிக்ரம்ய ஶைலேந்த்ரம் ஹேமகர்பம் மஹாகிரிம் ।**
**தத: ஸுதர்ஶனம் நாம கந்துமர்ஹத பர்வதம் ॥** 17



தம் - அந்த
ஶைலேந்த்ரம் - மலையரசை
அதிக்ரம்ய - தாண்டி,
தத: - அதன்பின்னர்
மஹாகிரிம் - மலைகளில் சிறந்ததும்
ஹேமகர்பம் - பொன் நிறமுடையதுமான
ஸுதர்ஶனம் - சுதர்சனம்
நாம - என்ற
பர்வதம் - பர்வதத்திற்கு
கந்தும் அர்ஹத - போகக்கடவீர்.

**ततो देवसखो नाम पर्वतः पतगालयः ।**
**नानापक्षिगणाकीर्णो विविधद्रुमभूषितः ॥**

**ததோ தேவஸகோ நாம பர்வத: பதகாலய: ।**
**நாநா பக்ஷி கணா கீர்ணோ விவித த்ரும பூஷித: ॥** 18

தத: - அவ்விடத்தில்
நாநா பக்ஷி கணாகீர்ண: - பலவகைப் பக்ஷிகளால் நிறைந்து
பதகாலய: - பக்ஷிகளுக்கு இருப்பிடமாயிருக்கிறதும்
விவித த்ரும பூஷித: - பலவிதமான மரங்களால் அழகுற்று விளங்குகிறதுமான
தேவ ஸக: நாம - தேவசகம் என்ற
பர்வத: - பர்வதமொன்றிருக்கிறது.

**तस्य काननषण्डेषु निर्झरेषु गुहासु च ।**
**रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥**

**தஸ்ய கானனஷண்டேஷு நிர்ஜரேஷு குஹாஸு ச ।**
**ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ்ததஸ்தத: ॥** 19

தஸ்ய - அதன்
கானன ஷண்டேஷு - வனசமூகங்களிலும்
நிர்ஜரேஷு - அருவிகளிலும்
குஹாஸு ச - குகைகளிலும்
ததஸ்தத: - எங்கும்
ராவண: - ராவணன்
வைதேஹ்யா: ஸஹ - ஸீதாதேவியோடுகூட
மார்கிதவ்ய: - தேடத்தக்கவன்.

**तमतिक्रम्य चाकाशं सर्वतः शतयोजनम् ।**
**अपर्वतनदीवृक्षं सर्वसत्त्वविवर्जितम् ॥**

**தமதிக்ரம்ய சாகாஶம் ஸர்வத: ஶதயோஜனம் ।**
**அபர்வத நதீவ்ருக்ஷம் ஸர்வ ஸத்த்வ விவர்ஜிதம் ॥** 20

| | |
|---|---|
| தம் | - அதை |
| அதிக்ரம்ய | - தாண்டி, |
| ஸர்வத: | - எல்லைப்புறங்களிலும், |
| ஶத யோஜனம் | - நூறு யோஜனை நீண்டதும் |
| அபர்வத நதீவ்ருக்ஷம் | - மலை, நதி, விருக்ஷம் இவைகள் எதுவும் இல்லாததும் |
| ஸர்வ ஸத்த்வ விவர்ஜிதம் ச | - பிராணிகள் எதுவுமில்லாததுமான |
| ஆகாஶம் | - வெளியிருக்கிறது. |

**तं तु शीघ्रमतिक्रम्य कान्तारं रोमहर्षणम् ।**
**कैलासं पाण्डरं शैलं प्राप्य हृष्टा भविष्यथ ॥**

தம் து ஶீக்ர மதிக்ரம்ய காந்தாரம் ரோமஹர்ஷணம் ।
கைலாஸம் பாண்டரம் ஶைலம் ப்ராப்ய ஹ்ருஷ்டா பவிஷ்யத ॥ 21

| | |
|---|---|
| தம் | - அந்த |
| ரோமஹர்ஷணம் | - மயிர்குச்செறியும்படி பயங்கரமான |
| காந்தாரம் து | - வனப்பிரதேசத்தையும் |
| ஶீக்ரம் | - விரைவில் |
| அதிக்ரம்ய | - கடந்து, |
| பாண்டுரம் | - வெண்மையான |
| கைலாஸம் | - கைலாச |
| ஶைலம் | - மலையை |
| ப்ராப்ய | - அடைந்து, |
| ஹ்ருஷ்டா: | - உள்ளம் பூரித்தவர்களாக |
| பவிஷ்யத | - ஆகுவீர். |

**तत्र पाण्डरमेघाभं जाम्बूनदपरिष्कृतम् ।**
**कुबेरभवनं रम्यं निर्मितं विश्वकर्मणा ॥**

தத்ர பாண்டரமேகாபம் ஜாம்பூநத பரிஷ்க்ருதம் ।
குபேரபவனம் ரம்யம் நிர்மிதம் விஶ்வகர்மணா ॥ 22

| | |
|---|---|
| தத்ர | - அவ்விடத்தில் |
| பாண்டுர மேகாபம் | - வெண்மேகத்தை நிகர்த்ததும், |
| ஜாம்பூநத பரிஷ்க்ருதம் | - பொன்னால் குறையின்றி செய்யப்பட்டதும், |
| விஶ்வகர்மணா | - விச்வகர்மாவால் |
| ரம்யம் | - அழகாய் |
| நிர்மிதம் | - நிர்மிக்கப்பட்டதுமான |
| குபேர பவனம் | - குபேரனுடைய மாளிகையிருக்கிறது. |

**विशाला नलिनी यत्र प्रभूतकमलोत्पला ।**
**हंसकारण्डवाकीर्णा ह्यप्सरोगणसेविता ॥**



விஶாலா நளினீ யத்ர ப்ரபூத கமலோத் பலா ।
ஹம்ஸ காரண்டவாகீர்ணா ஹ்யப்ஸரோகணஸேவிதா ॥ 23

| | |
|---|---|
| யத்ர ஹி | - எதுவோ அதில் |
| விஶாலா | - விசாலமான |
| நளினீ | - ஒரு தாமரை ஓடை, |
| ப்ரபூத கமலோத்பலா | - தாமரை, ஆம்பல், இவைகளும், |
| ஹம்ஸ காரண்டவா கீர்ணா | - அன்னங்கள், நீர்க்காக்கைகள், இவைகளும் நிறைந்துள்ளதாய் |
| அப்ஸரோகண ஸேவிதா | - அப்ஸரக் கூட்டங்களால் கொண்டாடப் பெற்று விளங்குகிறது. |

**तत्र वैश्रवणो राजा सर्वभूतनमस्कृतः ।**
**धनदो रमते श्रीमान् गुह्यकैः सह यक्षराट् ॥**

தத்ர வைஶ்ரவணோ ராஜா ஸர்வபூத நமஸ்க்ருத: ।
தநதோ ரமதே ஶ்ரீமான் குஹ்யகை: ஸஹ யக்ஷராட் ॥ 24

| | |
|---|---|
| தத்ர | - அதில் |
| யக்ஷராட் | - யக்ஷர்களுக்கு மன்னரும், |
| ஶ்ரீமான் | - ஶ்ரீமானும், |
| ஸர்வ பூத நமஸ்க்ருத: | - எல்லா உயிர்களாலும் நமஸ்கரிக்கப் பெற்றவரும், |
| வைஶ்ரவண: | - விச்ரவஸ்ஸின் புதல்வருமான |
| தநத: | - குபேர |
| ராஜா | - மன்னர் |
| குஹ்யகை: ஸஹ | - பொக்கிஷ ரக்ஷகர்களாகிய குஹ்யகர்கள் என்பவர்களோடுகூட |
| ரமதே | - வஸிக்கிறார். |

**तस्य चन्द्रनिकाशेषु पर्वतेषु गुहासु च ।**
**रावणः सह वैदेह्या मार्गितव्यस्ततस्ततः ॥**

தஸ்ய சந்த்ர நிகாஶேஷு பர்வதேஷு குஹாஸு ச ।
ராவண: ஸஹ வைதேஹ்யா மார்கிதவ்யஸ் ததஸ்தத: ॥ 25

| | |
|---|---|
| தஸ்ய | - அதன் |
| சந்த்ர நிகாஶேஷு | - சந்திரனை நிகர்த்த |
| பர்வதேஷு | - குன்றுகளிலும், |
| குஹாஸு ச | - குகைகளிலும், |
| ததஸ்தத: | - எல்லாவிடங்களிலும் |
| ராவண: | - ராவணன் |
| வைதேஹ்யா ஸஹ | - ஸீதாதேவியோடுகூட |
| மார்கிதவ்ய: | - தேடத்தக்கவன். |

क्रौञ्चं तु गिरिमासाद्य बिलं तस्य सुदुर्गमम् ।
अप्रमत्तैः प्रवेष्टव्यं दुष्प्रवेशं हि तत् स्मृतम् ॥

க்ரௌஞ்சம் து கிரிமாஸாத்ய பிலம் தஸ்ய ஸுதுர்கமம் ।
அப்ரமத்தை: ப்ரவேஷ்டவ்யம் துஷ்ப்ரவேஶம் ஹி தத் ஸ்ம்ருதம் ॥ 26

க்ரௌஞ்சம் - கிரௌஞ்சமென்ற
கிரிம் - மலையை
ஆஸாத்ய - அடைந்து,
தஸ்ய - அதன்
ஸுதுர்கமம் - மிகவும் புகுதற்கரியதான
பிலம் து - குகையும்
அப்ரமத்தை: - வெகு ஜாக்கிரதையுடனிருக்குமுங்களால்
ப்ரவேஷ்டவ்யம் - புகத்தக்கது.
ஹி - ஏனெனில்
தத் - அது
துஷ்ப்ரவேஶம் - புகுதற்கரியதென்று
ஸ்ம்ருதம் - கூறப்பட்டிருக்கிறது.

वसन्ति हि महात्मानस्तत्र सूर्यसमप्रभाः ।
देवैरप्यर्चिताः सम्यग्देवरूपा महर्षयः ॥

வஸந்தி ஹி மஹாத்மானஸ் தத்ர ஸூர்யஸமப்ரபா: ।
தேவைரப்யர்சிதா: ஸம்யக் தேவரூபா மஹர்ஷய: ॥ 27

தத்ர ஹி - அதில்தான்
ஸூர்ய ஸமப்ரபா: - சூரியனைப் போன்ற ஒளியுடையவர்களும்
தேவரூபா: - தேவரூபமுடையவர்களும்
தேவை: அபி - தேவர்களாலும்
ஸம்யக் - பக்தியுடன்
அர்சிதா: - பூஜிக்கப்பட்டவர்களுமான
மஹாத்மான: - மஹாத்மாக்களாகிய
மஹர்ஷய: - மகரிஷிகள்
வஸந்தி - வசிக்கிறார்கள்.

क्रौञ्चस्य तु गुहाश्चान्याः सानूनि शिखराणि च ।
निर्दराश्च नितम्बाश्च विचेतव्यास्ततस्ततः ॥

க்ரௌஞ்சஸ்ய து குஹாஶ்சான்யா: ஸாநூநி ஶிகராணி ச ।
நிர்தராஶ்ச நிதம்பாஶ்ச விசேதவ்யாஸ் ததஸ் தத: ॥ 28

க்ரௌஞ்சஸ்ய - கிரௌஞ்ச மலையினது
அன்யா: - மற்றுமுள்ள
குஹா: ச - குகைகளும்



ஸாநூநி - தாழ்வரைகளும்
ஶிகராணி ச - கொடுமுடிகளும்
நிர்ஜரா: ச - மலையருவிகளும்
நிதம்பா: ச - புறவரைகளும்
ததஸ்தத: து - எல்லாமும்
விசேதவ்யா: - தேடத்தக்கவைகள்.

क्रौञ्चस्य शिखरं चापि निरीक्ष्य च ततस्ततः ।
अवृक्षं कामशैलं च मानसं विहगालयम् ॥

க்ரௌஞ்சஸ்ய ஶிகரம் சாபி நிரீக்ஷ்ய ச ததஸ்தத: ।
அவ்ருக்ஷம் காமஶைலம் ச மானஸம் விஹகாலயம் ॥ 29

न गतिस्तत्र भूतानां देवदानवरक्षसाम् ।
स च सर्वैर्विचेतव्यः पर्वतो बहुकन्दरः ॥

ந கதிஸ் தத்ர பூதாநாம் தேவ தானவரக்ஷஸாம் ।
ஸ ச ஸர்வைர்விசேதவ்ய: பர்வதோ பஹுகந்தர: ॥ 30

க்ரௌஞ்சஸ்ய - கிரௌஞ்ச பர்வதத்தினது
ஶிகரம் ச - சிகரத்தையும்,
அவ்ருக்ஷம் - மரமில்லாத
காமஶைலம் ச - காமபர்வதத்தையும்,
விஹகாலயம் - பக்ஷிகளின் இருப்பிடமாகிய
மானஸம் அபி - மானஸஸரஸ்ஸையும்
நிரீக்ஷ்ய ச - பார்த்துவிட்டு,
பஹுகந்தர: - பல குகைகளையுடைய
ஸ: - அந்த
பர்வத: ச - பர்வதமும் (கிரௌஞ்ச பர்வதமும்)
ஸர்வை: - தங்களெல்லோராலும்
ததஸ்தத: - எங்கும்
விசேதவ்ய: - தேடத்தக்கது.
தத்ர - அதில்
பூதாநாம் - பிராணிகளுக்கும்
தேவ தானவ ரக்ஷஸாம் - தேவர்கள், தானவர்கள், ராக்ஷஸர்கள் இவர்களுக்கும்
கதி: ந - உட்புகுதல் முடியாது.

क्रौञ्चं गिरिमतिक्रम्य मैनाको नाम पर्वतः ।
मयस्य भवनं यत्र दानवस्य स्वयं कृतम् ॥

க்ரௌஞ்சம் கிரிமதிக்ரம்ய மைநாகோ நாம பர்வத: ।
மயஸ்ய பவனம் யத்ர தானவஸ்ய ஸ்வயம் க்ருதம் ॥ 31

க்ரௌஞ்சம் - கிரௌஞ்ச
கிரிம் - மலைக்கு

அதிக்ரம்ய - அப்பால்,
மைநாக: நாம - மைனாகமென்ற
பர்வத: - பர்வதமிருக்கிறது.
தத்ர - அதில்
தானவஸ்ய - தானவனாகிய
மயஸ்ய - மயனுடைய
பவனம் - மாளிகை
ஸ்வயம் - தன்னாலேயே
க்ருதம் - செய்யப்பட்டிருக்கிறது.

**मैनाकस्तु विचेतव्यः ससानुप्रस्थभूतलः ।**
**स्त्रीणामश्वमुखीनां च निकेतास्तत्र तत्र तु ॥**

**மைநாகஸ்து விசேதவ்ய: ஸஸாநு ப்ரஸ்த பூதல: ।**
**ஸ்த்ரீணாமஶ்வ முகீனாம் ச நிகேதாஸ் தத்ர தத்ர து ॥** 32

தத்ர தத்ர து - அதில் அங்கங்கேயே
அஶ்வமுகீனாம் - கின்னர
ஸ்த்ரீணாம் - ஸ்த்ரீகளுடைய
நிகேதா: - வீடுகளிருக்கின்றன,
மைநாக: து - மைனாகபர்வதமும்
ஸஸாநு ப்ரஸ்த பூதல: ச- தாழ்வரைகள், ஸமபூமிகள், பூப்பிரதேசங்கள், இவைகளுடன்
விசேதவ்ய: - தேடத்தக்கது.

**तं देशं समतिक्रम्य आश्रमं सिद्धसेवितम् ।**
**सिद्धा वैखानसास्तत्र वालखिल्याश्च तापसाः ॥**

**தம் தேஶம் ஸமதிக்ரம்ய ஆஶ்ரமம் ஸித்தஸேவிதம் ।**
**ஸித்தா வைகானஸாஸ்தத்ர வாலகில்யாஶ்ச தாபஸா: ॥** 33

தம் - அந்த
தேஶம் - பிரதேசத்தை
ஸமதிக்ரம்ய - தாண்டி,
ஸித்தஸேவிதம் - சித்தர்கள் வசிக்கின்ற
ஆஶ்ரமம் - ஓர் ஆச்ரமம் இருக்கிறது.
தத்ர ச - அதிலும்
ஸித்தா: - சித்தர்கள்
வைகானஸா: - வைகானஸர்கள்
வாலகில்யா: - வாலகில்யர்கள் என்ற
தாபஸா: - தபஸ்விகள் வசிக்கின்றார்கள்.

**वन्द्यास्ते तु तपःसिद्धास्तापसा वीतकल्मषाः ।**
**प्रष्टव्या चापि सीतायाः प्रवृत्तिर्विनयान्वितैः ॥**



**வந்த்யாஸ்தே து தப: ஸித்தாஸ்தாபஸா வீதகல்மஷா: ।**
**ப்ரஷ்டவ்யா சாபி ஸீதாயா: ப்ரவ்ருத்திர் விநயான் விதை: ॥** 34

தப: ஸித்தா: - தவத்தால் சித்தி பெற்றவரும்
தபஸா - தவத்தால்
வீதகல்மஷா: - பாபமொழிந்தவர்களுமான
தே து - அவர்களும்
வந்த்யா: - ஸேவிக்கப்பட வேண்டியவர்கள்.
ஸீதாயா: - ஸீதாதேவியினுடைய
ப்ரவ்ருத்தி: அபி ச - தற்கால நிலமையும்
விநயான் விதை: - வினயத்தோடு கூடிய உங்களால்
ப்ரஷ்டவ்யா - கேட்டறியத்தக்கது.

**हेमपुष्करसंछन्नं तस्मिन् वैखानसं सरः ।**
**तरुणादित्यसंकाशैर्हंसैर्विचरितं शुभैः ॥**

**ஹேம புஷ்கரஸஞ்சந்நம் தஸ்மின் வைகானஸம் ஸர: ।**
**தருணா தித்ய ஸங்காஶைர் ஹம்ஸைர் விசரிதம் ஶுபை: ॥** 35

தஸ்மின் - அதில்
ஹேம புஷ்கர ஸஞ்சந்நம்- பொற்றாமரைகளால் மறைக்கப்பட்டதும்
தருணாதித்ய ஸங்காஶை:-பாலசூரியனை நிகர்த்ததும்
ஶுபை: - அழகிய
ஹம்ஸை: - ஹம்ஸங்களால்
விசரிதம் - வசிக்கப்பட்டதுமான
வைகானஸம் - வைகானஸம் என்கிற
ஸர: - ஸரஸ் இருக்கிறது.

**औपवाह्यः कुबेरस्य सार्वभौम इति स्मृतः ।**
**गजः पर्येति तं देशं सदा सह करेणुभिः ॥**

**ஔபவாஹ்ய: குபேரஸ்ய ஸார்வபௌம இதி ஸ்ம்ருத: ।**
**கஜ: பர்யேதி தம் தேஶம் ஸதா ஸஹ கரேணுபி: ॥** 36

குபேரஸ்ய - குபேரனுடைய
ஔபவாஹ்ய: - வாஹனமான
ஸார்வபௌம: - சார்வபௌமம்
இதி - என்று
ஸ்ம்ருத: - அழைக்கப்படும்
கஜ: - யானை
ஸதா - எப்பொழுதும்
கரேணுபி: - பெண் யானைகளோடு
ஸஹ - கூட
தம் - அந்த

தேஶம் - பிரதேசத்தில்
பர்யேதி - திரிகிறது.

तत् सरः समतिक्रम्य नष्टचन्द्रदिवाकरम् ।
अनक्षत्रगणं व्योम निष्पयोदमनादितम् ॥

தத் ஸர: ஸமதிக்ரம்ய நஷ்டசந்த்ர திவாகரம் ।
அநக்ஷத்ரகணம் வ்யோம நிஷ்பயோதமநாதிதம் ॥ 37

தத் - அந்த
ஸர: - ஸரஸை
ஸமதிக்ரம்ய - தாண்டி,
நஷ்டசந்த்ர திவாகரம் - சந்திரசூரியனில்லாததும்,
அநக்ஷத்ர கணம் - நக்ஷத்திர கணங்களில்லாததும்,
நிஷ்பயோதம் - மேகமில்லாததும்,
அநாதிமத் - ஆரம்பம் இதென்று தெரியாததுமாகிய
வ்யோம - ஆகாசமிருக்கிறது.

गभस्तिभिरिवार्कस्य स तु देशः प्रकाशते ।
विश्राम्यद्भिस्तपःसिद्धैर्देवकल्पैः स्वयंप्रभैः ॥

கபஸ்திபிரிவார்கஸ்ய ஸது தேஶ: ப்ரகாஶதே ।
விஶ்ராம்யத் பிஸ்தப: ஸித்தைர் தேவகல்பை: ஸ்வயம் ப்ரபை: ॥ 38

ஸ: - அந்த
தேஶ: - பிரதேசமானது
ஸ்வயம் ப்ரபை: - தங்கள் ஒளியால் பிரகாசிக்கும்
தேவ கல்பை: - தேவர்களை நிகர்த்தவர்களும்
விஶ்ராம் யத்பி: - இளைப்பாறிக்கொண்டிருக்கிறவர்களுமான
தப: ஸித்தை: - தவத்தால் சித்தியடைந்தவர்களால்
அர்கஸ்ய - சூரியபகவானது
கபஸ்திபி - கிரணங்களால்
இவ து - எவ்வண்ணமோ அவ்வண்ணமே
ப்ரகாஶதே - பிரகாசிக்கிறது.

तं तु देशमतिक्रम्य शैलोदा नाम निम्नगा ॥

தம் து தேஶமதிக்ரம்ய ஶைலோதா நாம நிம்நகா ॥ 39

தம் - அந்த
தேஶம் து - பிரதேசத்தையும்
அதிக்ரம்ய - தாண்டி,
ஶைலோதா நாம - சைலோதா என்ற
நிம்நகா - நதியிருக்கிறது.



उभयोस्तीरयोस्तस्याः कीचका नाम वेणवः ।
तैश्च यान्ति परं पारं सिद्धान्प्रत्यानयन्ति च ॥

உபயோஸ்தீரயோஸ் தஸ்யா: கீசகா நாம வேணவ: ।
தை ச யாந்தி பரம் தீரம் ஸித்தான் ப்ரத்யானயந்தி ச ॥ 40

தஸ்யா: - அதன்
உபயோ: - இரு
தீரயோ: - கரைகளிலுமிருக்கின்ற
கீசகா: நாம - கீசகமென்னும்
வேணவ: - மூங்கில்கள்
தை: ச - அவர்களோடுகூடவே
பரம் பாரம் - அக்கரைக்கு
யாந்தி - வளைந்து செல்லுகின்றன
ஸித்தான் - சித்தர்களை
ப்ரத்யானயந்தி ச - திரும்பவும் கொண்டுவந்து சேர்க்கின்றன.

उत्तराः कुरवस्तत्र कृतपुण्यप्रतिश्रयाः ॥

உத்தரா: குரவஸ் தத்ர க்ருதபுண்ய ப்ரதி ஶ்ரயா: ॥ 41
க்ருத புண்ய ப்ரதிஶ்ரயா:-புண்யம் செய்தவர்களுக்கிருப்பிடமாகிய
உத்தரா: - உத்தர
குரவ: - குருதேசங்கள்
தத்ர - அவ்விடத்திலிருக்கின்றன

ततः काञ्चनपद्माभिः पद्मिनीभिः कृतोदकाः ।
नीलवैदूर्यपत्राढ्या नद्यस्तत्र सहस्रशः ॥

தத: காஞ்சன பத்மாபி: பத்மிநீபி: க்ருதோதகா: ।
நீலவைடூர்ய பத்ராட்யா நத்யஸ்தத்ர ஸஹஸ்ரஶ: ॥ 42

தத: - அதற்கப்பால்
காஞ்சன பத்மாபி: - பொற்றாமரையுள்ளவைகளும்
நீலவைடூர்ய பத்ராபி:- இந்திரநீலம் வைடூர்யமிவைகளாலான இலைகளையுடையதுமான
பத்மிநீபி: - தாமரை ஓடைகளால்
க்ருதோதகா: - பெருக்கெடுத்தோடுகின்ற
நத்ய: - நதிகள்
தத்ர - அங்கு
ஸஹஸ்ரஶ: - ஆயிரக்கணக்காக இருக்கின்றன.

रक्तोत्पलवनैश्चात्र मण्डिताश्च हिरण्मयैः ।
तरुणादित्यसदृशैर्भान्ति तत्र जलाशयाः ॥

ஜீவிதாந்தாய - வாழ்வுநாள் முடிவு காரணமாய்
ப்ரநஷ்ட: - மாண்டான்.
தத்ர - அவ்விஷயத்தில்
மஹாமுனி: - முனிவர்பெருமான்
க்ருத்த: - சினங்கொண்டவர் ஆனார்.

तेन धर्मात्मना शप्तं कृत्स्नं तत्र महद्वनम् ।
अशरण्यं दुराधर्षं मृगपक्षिविवर्जितम् ॥

தேந தர்மாத்மநாஶப்தம் க்ருத்ஸ்நம் தத்ர மஹத்வனம் ।
அஶரண்யம் துராதர்ஷம் ம்ருகபக்ஷி விவர்ஜிதம் ॥ 14

தத்ர - அப்பொழுது
மஹத் - சிறந்த
வனம் - வனம்
க்ருத்ஸ்நம் - முழுமையும்
அஶரண்யம் - வசிக்க அனர்ஹமாயும்,
துராதர்ஷம் - அணுக முடியாததாயும்,
ம்ருகபக்ஷி விவர்ஜிதம் - மிருகங்கள், பக்ஷிகள் இல்லாததாயும்,
தர்மாத்மநா - தர்மாத்மாவாகிய
தேந - அவரால்
ஶப்தம் - சபிக்கப்பட்டது.

तस्य ते काननान्तांश्च गिरीणां कन्दराणि च ।
प्रभवाणि नदीनां च विचिन्वन्ति समाहिताः ॥

தஸ்ய தே காநநாந்தாம்ஶ்ச கிரீணாம் கந்தராணி ச ।
ப்ரபவாணி நதீநாம் ச விசிந்வந்தி ஸமாஹிதா: ॥ 15

தே - அவர்கள்
ஸமாஹிதா: - மிக ஊக்கமுடையவர்களாய்,
தஸ்ய - அந்த
காநநாந்தான் ச - காட்டுப்பிரதேசங்களெல்லாவற்றிலும்
கிரீணாம் - மலைகளுடைய
கந்தராணி ச - குகைகளிலும்,
நதீநாம் - நதிகளின்
ப்ரபவாணி ச - உத்பத்திஸ்தானங்களிலும்
விசிந்வந்தி - தேடினார்கள்.

तत्र चापि महात्मानो नापश्यञ्जनकात्मजाम् ।
हर्तारं रावणं चापि सुग्रीवप्रियकारिणः ॥

தத்ர சாபி மஹாத்மாநோ நாபஶ்யஞ்ஜனகாத்மஜாம் ।
ஹர்தாரம் ராவணம் சாபி ஸுக்ரீவ ப்ரியகாரிண: ॥ 16



ஸுக்ரீவ ப்ரியகாரிண: - ஸுக்ரீவனிடத்தில் அதிக பத்திமைகொண்ட
மஹாத்மன: - மகாத்மாக்களாகும் அவர்கள்
தத்ர அபி - அவ்விடத்திலும்
ஜனகாத்மஜாம் ச - ஜானகிதேவியையும்
ஹர்தாரம் - திருடிச்சென்ற
ராவணம் அபி ச - ராவணனையும்
அபஶ்யன் ந - காணவில்லை.

ते प्रविश्याशु तं भीमं लतागुल्मसमावृतम् ।
ददृशुः क्रूरकर्माणमसुरं सुरनिर्भयम् ॥

தே ப்ரவிஶ்ய து தம் பீமம் லதாகுல்ம ஸமாவ்ருதம் ।
தத்ருஶு: க்ரூர கர்மாண மஸுரம் ஸுரநிர்பயம் ॥ 17

தே - அவர்கள்
லதா குல்ம ஸமாவ்ருதம் - கொடிகளும் புதர்களும் நிறைந்த
பீமம் - பயங்கரமான
தம் து - அதற்குள்ளும்
ப்ரவிஶ்ய - நுழைந்து
ஸுரநிர்பயம் - தேவர்களுக்கும் அஞ்சாத
க்ரூர கர்மாணம் - கொடிய செயலுற்ற
அஸுரம் - ஓர் அசுரனை
தத்ருஶு: - கண்டார்கள்.

तं दृष्ट्वा वानरा घोरं स्थितं शैलमिवापरम् ।
गाढं परिहिताः सर्वे दृष्ट्वा तं पर्वतोपमम् ॥

தம் த்ருஷ்ட்வா வாநரா கோரம் ஸ்திதம் ஶைலமிவாபரம் ।
காடம் பரிஹிதா: ஸர்வே த்ருஷ்ட்வா தம் பர்வதோபமம் ॥ 18

வாநரா: - வானரர்கள்
கோரம் - பயங்கரமாய்
அபரம் - மற்றொரு
ஶைலம் இவ - மலையெனவே
ஸ்திதம் - இருக்கும்
தம் - அவனை
த்ருஷ்ட்வா - பார்த்து,
ஸர்வே தம் - எல்லோரும் அவனை
பர்வதோபமம் - மலைக்குச் சமானமாய் இருப்பவனாக
த்ருஷ்ட்வா - கவனித்து,
காடம் - இறுக்கி
பரிஹிதா: - ஒருவனை ஒருவன் கட்டிக்கொண்டார்கள்.

**सोऽपि मारीचतनयः सद्यः प्राप्तानमन्यत ।**
**अथैनान् त्रासदीप्ताक्षान् समवेतानभिद्रवत् ॥**

**ஸோऽபி மாரீச தனய: ஸத்ய: ப்ராப்தாநமன்யத ।**
**அதைநான் த்ராஸ தீப்தாக்ஷான் ஸம வேதானாபி த்ரவத் ॥** 19

| | | |
|---|---|---|
| மாரீசதனய: | - | மாரீசனின் புதல்வனான |
| ஸ: அபி | - | அவனும் |
| ஸத்ய: | - | ஏககாலத்தில் |
| ப்ராப்தான் | - | கைய்யில் சிக்கிக்கொண்டவர்களாய் |
| அமன்யத | - | எண்ணினான். |
| அத | - | அதனால் |
| த்ராஸதீப்தாக்ஷான் | - | பயத்தால் ஜ்வலிக்கும் கண்களை உடையவர்களாய் |
| ஸமவேதான் | - | ஒன்று சேர்ந்திருக்கும் |
| ஏதான் | - | இவர்களை |
| அபித்ரவத் | - | கிட்டி ஓடினான். |

**सोऽपि तान् वानरान् सर्वान्नष्टाः स्थेत्यब्रवीद्बली ।**
**अभ्यधावत संक्रुद्धो मुष्टिमुद्यम्य संहितम् ॥**

ஸோऽபி தான் வாநரான் ஸர்வாந்நஷ்டா: ஸ்தேத்ய ப்ரவீத் பலீ।
அப்யதாவத ஸங்க்ருத்தோ முஷ்டி முத்யம்ய ஸம்ஹிதம் ॥ 20

| | | |
|---|---|---|
| பலீ | - | பலசாலியாகிய |
| ஸ: அபி | - | அவனும் |
| தான் | - | அந்த |
| வாநரான் | - | வானரர்களை |
| ஸர்வாந் | - | எல்லோரையும் பார்த்து, |
| நஷ்டா: ஸ்த | - | நீங்கள் செத்தீர்கள் |
| இதி | - | என்று |
| அப்ரவீத் | - | சொன்னான். |
| ஸங்க்ருத்த: | - | மிகச்சினங்கொண்டவனாய் |
| முஷ்டிம் | - | முஷ்டியை |
| உத்யம்ய | - | பொத்திக்கொண்டு |
| ஸம்ஹிதம் | - | உயரத்தூக்கிக்கொண்டு, |
| அப்யதாவத | - | விரைந்தோடி வந்தான். |

**तमापतन्तं सहसा वालिपुत्रोऽङ्गदस्तदा ।**
**रावणोऽयमिति ज्ञात्वा तलेनाभिजघान ह ॥**

**தமாபதந்தம் ஸஹஸா வாலிபுத்ரோऽங்கதஸ்ததா ।**
**ராவணோऽயமிதி ஞாத்வா தலேநாபிஜகாந ஹ ॥** 21



| | | |
|---|---|---|
| ததா | - | அப்பொழுது |
| வாலிபுத்ர: | - | வாலியின் புதல்வனான |
| அங்கத: | - | அங்கதன் |
| ஸஹஸா | - | திடீரென |
| ஆபதந்தம் | - | எதிர்த்தோடிவரும் |
| தம் | - | அவனை, |
| அயம் | - | இவன் |
| ராவண: | - | ராவணன் |
| இதி | - | என்று |
| ஞாத்வா | - | எண்ணி, |
| தலேந ஹ | - | உள்ளங்கையினாலேயே |
| அபிஜகாந | - | அறைந்தான். |

**स वालिपुत्राभिहतो वक्त्राच्छोणितमुद्वमन् ।**
**असुरो न्यपतद्भूमौ पर्यस्त इव पर्वतः ॥**

ஸ வாலி புத்ராபிஹதோ வக்த்ராச் சோணித முத்வமன் ।
அஸுரோந்ய பதத் பூமௌ பர்யஸ்த இவ பர்வத: ॥ 22

| | | |
|---|---|---|
| வாலி புத்ராபிஹத: | - | வாலிபுத்ரனால் அடிக்கப்பட்ட |
| ஸ: | - | அந்த |
| அஸுர: | - | அசுரன் |
| வக்த்ராத் | - | வாயினின்று |
| சோணிதம் | - | ரத்தத்தை |
| உத்வமன் | - | கக்கிக்கொண்டு |
| பர்யஸ்த: | - | அடிபெயர்த்த |
| பர்வத: இவ | - | மலை என |
| பூமௌ | - | பூமியில் |
| ந்யபதத் | - | விழுந்தான். |

**तेऽपि तस्मिन्निरुच्छ्वासे वानरा जितकाशिनः ।**
**व्यचिन्वन् प्रायशस्तत्र सर्वं तद्गिरिगह्वरम् ॥**

தேऽபி தஸ்மின்நிருச் ச்வாஸே வாநரா ஜிதகாஶின: ।
வ்யசின்வன் ப்ராய ஶஸ்தத்ர ஸர்வம் தத் கிரி கஹ்வரம் ॥ 23

| | | |
|---|---|---|
| தஸ்மின் | - | அவன் |
| நிருச்ச்வாஸே | - | மாண்டுவிடவும் |
| தே | - | அந்த |
| வாநரா: | - | வானரர்கள் |
| ஜிதகாஶின: அபி | - | வெற்றியில் செருக்குற்றவர்களாகவே |
| தத்ர | - | அவ்விடத்தில் |
| தத் | - | அந்த |
| கிரிகஹ்வரம் | - | மலைக்குகையை |

ஸர்வம் - எங்கும்
ப்ராயஶ: - பெரும்பாலும்
வ்யசின்வன் - தேடினார்கள்.

विचितं तु ततः कृत्वा सर्वे ते काननं पुनः ।
अन्यदेवापरं घोरं विविशुर्गिरिगह्वरम् ॥

விசிதம் து தத: க்ருத்வா ஸர்வே தே கானனம் புன: ।
அன்யதேவாபரம் கோரம் விவிஶுர்கிரி கஹ்வரம் ॥ 24

தே - அவர்கள்
ஸர்வே து - எல்லோருமே
கானனம் - காட்டை
புன: - மீளவும்
விசிதம் - தேடிவிட்டு,
தத: - அதன்மேல்
அன்யத் - வேறு
அபரம் - மற்றொரு
கோரம் ஏவ - பயங்கரமாயிருக்கிறதான
கிரிகஹ்வரம் - மலைக்குகையினுள்
விவிஶு: - புகுந்தார்கள்.

ते विचित्य पुनः खिन्ना विनिष्पत्य समागताः ।
एकान्ते वृक्षमूले तु निषेदुर्दीनमानसाः ॥

தே விசித்ய புன: கிந்நா விநிஷ்பத்ய ஸமாகதா: ।
ஏகாந்தே வ்ருக்ஷ மூலே து நிஷேதுர் தீன மானஸா: ॥ 25

தே - அவர்கள்
புன: - இன்னொருமுறை
விசித்ய - தேடிவிட்டு,
விநிஷ்பத்ய - வெளியில் வந்து,
கிந்நா: - உடல் துவட்சியுற்றவர்களாய்
தீன மானஸா: து - ஏக்கம் பிடித்த மனமுற்றவர்களாய்
ஸமாகதா: - ஓரிடத்தில் கூடினவர்களாய்
ஏகாந்தே - ஏகாந்தமான
வ்ருக்ஷ மூலே - மரத்தினடியில்
நிஷேது: - உட்கார்ந்தார்கள்.

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே கண்டூவநாதி விசயோ நாம அஷ்டசத்வாரிம்ஶ: ஸர்க: ॥*



## ஏகோந பஞ்சாஶ: ஸர்க: - 49

अथाङ्गदस्तदा सर्वान् वानरानिदमब्रवीत् ।
परिश्रान्तो महाप्राज्ञः समाश्वास्य शनैर्वचः ॥

அதாங்கதஸ்ததா ஸர்வான்வாநராநிதமப்ரவீத் ।
பரிஶ்ராந்தோ மஹாப்ராஜ்ஞ: ஸமாஶ்வாஸ்ய ஶனைர்வச: ॥ 1

ததா - அப்பொழுது
பரிஶ்ராந்த: - விடா முயற்சியுடையவனும்
மஹாப்ராஜ்ஞ: - பேரறிவாளனுமான
அங்கத: - அங்கதன்
வாநராந் - வானரர்கள்
ஸர்வான் - எல்லோரையும்
ஸமாஶ்வாஸ்ய - தேற்றரவுபடுத்தி,
இதம் - பின்வரும்
வச: - மொழியை
ஶனை: அத - உள்ளங் குளிரும் வண்ணமாகவே
அப்ரவீத் - மொழிந்தான்.

वनानि गिरयो नद्यो दुर्गाणि गहनानि च ।
दरी गिरिगुहाश्चैव विचितानि समन्ततः ॥

வநாநி கிரயோ நத்யோ துர்காணி கஹநாநி ச ।
தரீகிரி குஹாஶ்சைவ விசிதாநி ஸமந்தத: ॥ 2

तत्र तत्र सहास्माभिर्जानकी न च दृश्यते ।
तद्वा रक्षो हृता येन सीता सुरसुतोपमा ॥

தத்ர தத்ர ஸஹாஸ்மாபிர்ஜானகீ ந ச த்ருஶ்யதே ।
தத்வா ரக்ஷோ ஹ்ருதா யேன ஸீதா ஸுரஸுதோபமா ॥ 3

அஸ்மாபி: - நம்மால்,
ஸஹ - கூடவே
வநாநி - வனங்களும்
கிரய: - மலைகளும்
நத்ய: - நதிகளும்
துர்காணி - துர்க்கங்களும்
கஹநாநி ச - குகைகளும்
தரீகிரி குஹா: ஏவ ச - மலையருவிகளும் மலைக்குகைகளும் ஆகிய இவைகள்
தத்ர தத்ர - அங்கங்கே
ஸமந்தத: - முற்றும்

விசிதாநி - தேடப்பட்டன.
ஜானகீ - ஜானகிதேவியார்
த்ருஶ்யதே ந - காணப்படவில்லை.
ஸுரஸுதோபமா - தெய்வப்பெண்ணென விளங்கும்
ஸீதா - ஸீதாதேவியார்
யேன - எவனால்
ஹ்ருதா - திருடிப்போகப்பட்டனளோ
தத் - அந்த
ரக்ஷ: வா - அரக்கனும்
ச - அப்படியே காணப்படவில்லை.

**कालश्च नो महान्यातः सुग्रीवश्चोग्रशासनः ।**
**तस्माद्भवन्तः सहिता विचिन्वन्तु समन्ततः ॥**

காலஶ்ச நோ மஹான் யாத: ஸுக்ரீவஶ்சோக்ரஶாஸன: ।
தஸ்மாத்பவந்த: ஸஹிதா விசிந்வந்து ஸமந்தத: ॥ 4

ந: - நமக்கு
கால: - தவணையாய் வரையப்பட்டிருந்த காலமோ
மஹான் - வெகுவாய்
யாத: - கடந்துவிட்டது.
ஸுக்ரீவ: ச - சுக்ரீவரோ
உக்ர ஶாஸன: - கொடிய தண்டனை விதிக்கிறவர்;
தஸ்மாத் - ஆகையால்
பவந்த: - நீங்கள்
ஸஹிதா: - ஒன்றுகூடி
ஸமந்தத: - எங்கும்
விசிந்வந்து - தேடக்கடவீர்கள்.

**विहाय तन्द्रीं शोकं च निद्रां चैव समुत्थिताम् ।**
**विचिनुध्वं यथा सीतां पश्यामो जनकात्मजाम् ॥**

விஹாய தந்த்ரீம் ஶோகம் ச நித்ராம் சைவ ஸமுத்திதாம் ।
விசிநுத்வம் யதா ஸீதாம் பஶ்யாமோ ஜனகாத்மஜாம் ॥ 5

தந்த்ரீம் ச - மனக்களைப்பையும்,
ஶோகம் ச - மனத்துயரத்தையும்,
ஸமுத்திதாம் - இப்பொழுது உண்டாயிருக்கும்
நித்ராம் ஏவ - மன ஏக்கத்தையும்
விஹாய - விட்டொழித்து,
ஜனகாத்மஜாம் - ஜனகர் திருமகளாகிய
ஸீதாம் - ஸீதாதேவியை
யதா பஶ்யாம: - எப்படிச் செய்தால் நாம் காணப்பெறலாமோ அப்படி
விசிநுத்வம் - நீங்கள் தேடக்கடவீர்கள்.



**अनिर्वेदं च दाक्ष्यं च मनसश्चापराजयम् ।**
**कार्यसिद्धिकराण्याहुस्तस्मादेतद्ब्रवीम्यहम् ॥**

அநிர்வேதம் ச தாக்ஷ்யம் ச மனஸஶ் சாபரா ஜயம் ।
கார்யஸித்திகராண்யாஹுஸ்தஸ்மா தேதத் ப்ரவீம்யஹம் ॥ 6

அநிர்வேதம் ச - மனந்தளராதிருத்தலையும்,
தாக்ஷ்யம் ச - இக்கட்டுகளிலேற்ற உபாயங்களை அனுஷ்டிக்குந் தன்மையையும்,
மனஸ: - மனத்தை
அபராஜயம் - மீறவிடாது அடக்கும் சக்தியையும்
கார்யஸித்தி கராணி - காரியசித்தி விளைவிக்கின்றவைகளாய்
ஆஹு: - பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.
தஸ்மாத் - ஆகையால்
அஹம் - நான்
ஏதத் - இதை
ப்ரவீமி - சொல்லுகிறேன்.

**अद्यापीदं वनं दुर्गं विचिन्वन्तु वनौकसः ।**
**खेदं त्यक्त्वा पुनः सर्वैर्वनमेतद्विचीयताम् ॥**

அத்யாபீதம் வனம் துர்கம் விசின்வந்து வனௌகஸ: ।
கேதம் த்யக்த்வா புன: ஸர்வைர்வனமேதத்விசீயதாம் ॥ 7

அத்யாபி - இன்னும்
வனௌகஸ: - வானரர்கள்
தத் - அந்த
துர்கம் - புகவரிய
வனம் - வனத்தை
விசின்வந்து - தேடவேண்டும்;
ஏதத் வனம் - இந்த வனமானது
புன: - இன்னொருதரம்
கேதம் - மனச்சோர்வை
த்யக்த்வா - விட்டொழித்து
ஸர்வை: - நாம் எல்லோராலும்
விசீயதாம் - தேடப்படவேண்டும்.

**अवश्यं क्रियमाणस्य दृश्यते कर्मणः फलम् ।**
**अलं निर्वेदमागम्य न हि नोन्मीलनं क्षमम् ॥**

அவஶ்யம் க்ரிய மாணஸ்ய த்ருஶ்யதே கர்மண: பலம் ।
அலம் நிர்வேத மாகம்ய ந ஹி நோந்மீலனம் க்ஷமம் ॥ 8

அவஶ்யம் - எந்த இக்கட்டு ஏற்படினும்
க்ரியமாணஸ்ய - காரியத்தை விடாது செய்யப்படும்
கர்மண: - ஒரு காரியத்தின்
பலம் - பயன்
த்ருஶ்யதே - காணப்படுகிறது
நிர்வேதம் - மனத்தளர்ச்சியை
ஆகம்ய அலம் - அடைந்தது போதும்.
நோந்மீலனம் ஹி - கண்களை மூடிக்கொள்ளுதலென்பதே
ந க்ஷமம் - தகாது.

सुग्रीवः कोपनो राजा तीक्ष्णदण्डश्च वानरः ।
भेतव्यं तस्य सततं रामस्य च महात्मनः ॥

ஸுக்ரீவ: கோபனோ ராஜா தீக்ஷ்ணதண்டஶ்ச வாநர: ।
பேதவ்யம் தஸ்ய ஸததம் ராமஸ்ய ச மஹாத்மன: ॥ 9

வாநர: - வானரனான
ஸுக்ரீவ: ராஜா - சுக்ரீவ மன்னர்
கோபந: - கோபிஷ்டன்,
தீக்ஷ்ண தண்ட: - கொடிய தண்டனை விதிக்கின்றவன்.
ஸததம் - எப்பொழுதும்
தஸ்ய ச - அவனுக்கும்
மஹாத்மன: - மகாத்மாவான
ராமஸ்ய ச - ராமருக்கும்
பேதவ்யம் - பயப்பட வேண்டியது.

हितार्थमेतदुक्तं वः क्रियतां यदि रोचते ।
उच्यतां वा क्षमं यन्नः सर्वेषामेव वानराः ॥

ஹிதார்த மேதத்உக்தம் வ: க்ரியதாம் யதி ரோசதே ।
உச்யதாம் வா க்ஷமம் யந்ந: ஸர்வேஷாமேவ வாநரா: ॥ 10

வாநரா: - வானரர்களே!
வ: - உங்களது
ஹிதார்தம் - நன்மைக்காக
ஏதத் - இது
உக்தம் - சொல்லப்பட்டது,
ரோசதே யதி - இஷ்டமானால்,
க்ரியதாம் - அனுஷ்டிக்கப்படட்டும்.
வா - இல்லையாகில்
ந: ஸர்வேஷாம் - நம் எல்லோருக்கும்
க்ஷமம் - ஏற்றதாயிருக்கிறது
யத் ஏவ - எதுவோ அது
உச்யதாம் - சொல்லப்படட்டும்.



अङ्गदस्य वचः श्रुत्वा वचनं गन्धमादनः ।
उवाचाव्यक्तया वाचा पिपासाश्रमखिन्नया ॥

அங்கதஸ்ய வச: ஶ்ருத்வா வசனம் கந்தமாதன: ।
உவாசாவ்யக்தயா வாசாபி பாஸாஶ்ரமகிந்நயா ॥ 11

கந்தமாதன: - கந்தமாதனனென்பவன்
அங்கதஸ்ய - அங்கதனது
வச: ஶ்ருத்வா - சொல்லை கேட்டு,
பிபாஸாஶ்ரம கிந்நயா - தாகத்தாலும், சிரமத்தாலும் மனத்தளர்ச்சியை நன்கு விளங்கக் காட்டுகிறதும்
அவ்யக்தயா - செவ்வென புலப்படாதிருக்கிறதுமான
வாசா - சொற்கொண்டு
வசனம் - ஒரு மொழியை
உவாச - பின்வருமாறு மொழிந்தான்.

सदृशं खलु वो वाक्यमङ्गदो यदुवाच ह ।
हितं चैवानुकूलं च क्रियतामस्य भाषितम् ॥

ஸத்ருஶம் கலு வோ வாக்ய மங்கதோ யதுவாச ஹ ।
ஹிதம் சைவாநு கூலம் ச க்ரியதாமஸ்ய பாஷிதம் ॥ 12

வ: - உங்களுக்கு
அங்கத: - அங்கதன்
யத் - எந்த ஒரு
வாக்யம் - சொல்லை
உவாச ஹ - சொன்னானோ அது
ஸத்ருஶம் ச - அவனுக்கேற்றது,
அநுரூபம் ச - காரியத்திற்கேற்றது.
ஹிதம் ஏவ - நற்பயனையளிக்கத்தக்கது.
அஸ்ய - இவனது
பாஷிதம் - சொல்
கலு - எப்படியும்
க்ரியதாம் - செய்யப்படட்டும்.

पुनर्मार्गामहे शैलान् कन्दरांश्च दरीस्तथा ।
काननानि च शून्यानि गिरिप्रस्रवणानि च ॥

புனர்மார்காமஹே ஶைலான் கந்தராம்ஶ்ச தரீம்ஸ்ததா ।
கானனானி ச ஶூன்யாநி கிரிப்ரஸ்ரவணாநி ச ॥ 13

புன: - மீளவும்
ஶைலான் - மலைகளிலும்,
கந்தரான் ச - குகைகளிலும்,

தரீன் ததா - பள்ளத்தாக்குகளிலும்,
ஶூன்யாநி - பாழான
கானனானி - காடுகளிலும்,
கிரிப்ரஸ்ரவணாநி ச - மலையருவிகளிலும்,
மார்காமஹே - நாம் தேடுவோம்.

**यथोद्दिष्टानि सर्वाणि सुग्रीवेण महात्मना ।**
**विचिन्वन्तु वनं सर्वे गिरिदुर्गाणि सर्वशः ॥**

**யதோத்திஷ்டாநி ஸர்வாணி ஸுக்ரீவேண மஹாத்மநா ।**
**விசின்வந்து வனம் ஸர்வே கிரிதுர்காணி ஸர்வஶ: ॥** 14

ஸர்வே - எல்லோரும்
மஹாத்மநா - மகாத்மாவான
ஸுக்ரீவேண - ஸுக்ரீவனால்
யதோத்திஷ்டாநி - குறிப்பிட்டபடியான
ஸர்வாணி - எல்லாவற்றிலும்
வனம் - காட்டிலும்,
கிரிதுர்காணி - மலைகளிலும், துர்க்கங்களிலும்,
ஸர்வஶ: - எங்கும்
விசின்வந்து - தேடவேண்டும்.

**ततः समुत्थाय पुनर्वानरास्ते महाबलाः ।**
**विन्ध्यकाननसंकीर्णां विचेरुर्दक्षिणां दिशम् ॥**

**தத: ஸமுத்தாய புனர்வாநராஸ்தே மஹாபலா: ।**
**விந்த்யகானன ஸங்கீர்ணாம் விசேருர் தக்ஷிணாம் திஶம் ॥** 15

மஹாபலா: - மகா பலசாலிகளான
தே - அந்த
வாநரா: - வானரர்கள்,
புன: - மீளவும்
தத: - அவ்விடத்திலிருந்து
ஸமுத்தாய - எழுந்து,
விந்த்ய கானன ஸங்கீர்ணாம் - விந்திய மலைக் காடுகள் நிறைந்த
தக்ஷிணாம் திஶம் - தெற்கு திக்கில்
விசேரு: - தேடித்திரிந்தனர்.

**ते शारदाभ्रप्रतिमं श्रीमद्रजतपर्वतम् ।**
**शृङ्गवन्तं दरीमन्तमधिरुह्य च वानराः ॥**

**தே ஶாரதாப்ரப்ரதிமம் ஶ்ரீமத்ரஜத பர்வதம் ।**
**ஶ்ருங்கவந்தம் தரீமந்தமதிருஹ்ய ச வானரா: ॥** 16



**तत्र लोध्रवनं रम्यं सप्तपर्णवनानि च ।**
**व्यचिन्वंस्ते हरिवराः सीतादर्शनकाङ्क्षिणः ॥**

**தத்ர லோத்ரவனம் ரம்யம் ஸப்தபர்ண வநாநி ச ।**
**வ்யசின்வந்ஸ்தே ஹரிவ்ரா: ஸீதாதர்ஶந காங்க்ஷிண: ॥** 17

தே - அந்த
வானரா: - வானரர்கள்,
ஶாரதாப்ர ப்ரதிமம் - சரத்கால மேகத்திற்கொப்பானதும்,
ஶ்ருங்க வந்தம் - கொடுமுடிகளையுடையதும்,
தரீமந்தம் - குகைகளுடையதும்,
ஶ்ரீமத் - அழகியதுமான
ரஜத பர்வதம் - ரஜதமலையென்பதில்
அதிருஹ்ய - ஏறி,
ச - அதன்பின்னர்
ஸீதா தர்ஶன காங்க்ஷிண: - ஸீதாதேவியை தரிசிக்க வேண்டுமென்ற அவாகொண்டிருந்த
தே - அந்த
ஹரிவரா: - வானரோத்தமர்கள்
தத்ர - அவ்விடத்தில்
ரம்யம் - அழகிய
லோத்ரவனம் - வெள்ளொலுத்தி வனத்திலும்,
ஸப்த பர்ண வநாநி ச - ஏழிலைப்பாலை வனங்களிலும்,
வ்யசின் வந் - தேடினார்கள்.

**तस्याग्रमधिरूढास्ते श्रान्ता विपुलविक्रमाः ।**
**न पश्यन्ति स्म वैदेहीं रामस्य महिषीं प्रियाम् ॥**

**தஸ்யாக்ர மதிரூடாஸ்தே ஶ்ராந்தா விபுலவிக்ரமா: ।**
**ந பஶ்யந்தி ஸ்ம வைதேஹீம் ராமஸ்ய மஹிஷீம் ப்ரியாம் ॥** 18

விபுல விக்ரமா: - அளவுகடந்த ஆண்மையுடைய
தே - அவர்கள்
தஸ்ய - அதன்
அக்ரம் - உச்சியில்
அதிரூடா: - ஏறினவர்களாய்
ஶ்ராந்தா: - ஏக்கம்பிடித்தவர்களாய்
ராமஸ்ய - ஸ்ரீராமருடைய
ப்ரியாம் - அன்பார்ந்த
மஹிஷீம் - மனைவியாகிய
வைதேஹீம் - ஜானகிதேவியாரை
பஶ்யந்தி ஸ்ம ந - காணவில்லை.

ते तु दृष्टिगतं दृष्ट्वा तं शैलं बहुकन्दरम् ।
अवारोहन्त हरयो वीक्षमाणाः समन्ततः ॥

தே து திருஷ்டி கதம் த்ருஷ்ட்வா தம் ஶைலம் பஹுகந்தரம் ।
அவாரோஹந்த ஹரயோ வீக்ஷமாணாஸ் ஸமந்தத: ॥ 19

தே - அந்த
ஹரய: - வானரர்கள்,
பஹுகந்தரம் - பல குகைகளுற்ற
தம் - அந்த
ஶைலம் - பர்வதத்தை
திருஷ்டி கதம் க்ருத்வா-நன்கு தேடிவிட்டு,
து - இன்னும்
ததஸ்தத: - எங்கும்
வீக்ஷமாணா: - தேடிப்பார்த்துக்கொண்டு
அவாரோஹந்த - இறங்கினார்கள்.

अवरुह्य ततो भूमिं श्रान्ता विगतचेतसः ।
स्थित्वा मुहूर्तं तत्राथ वृक्षमूलमुपाश्रिताः ॥

அவருஹ்ய ததோ பூமிம் ஶ்ராந்தா விகத சேதஸ: ।
ஸ்தித்வா முஹூர்தம் தத்ராத வ்ருக்ஷமூலமுபாஶ்ரிதா: ॥ 20

தத: - அவ்விடத்திலிருந்து
பூமிம் - சமபூமியில்
அவருஹ்ய - இறங்கி,
தத்ர - அங்கேயே
முஹூர்தம் - ஒரு முகூர்த்த காலம்
விகத சேதஸ: - மனமிழந்தவர்களாய்
ஶ்ராந்தா: - களைப்புற்றவர்களாய்
ஸ்தித்வா - தங்கிவிட்டு,
அத - அதன்பின்னர்
வ்ருக்ஷமூலம் - ஒரு மரத்தடியை
உபாஶ்ரிதா: - அடைந்தார்கள்.

ते मुहूर्तं समाश्वस्ताः किञ्चिद्भग्नपरिश्रमाः ।
पुनरेवोद्यताः कृत्स्नां मार्गितुं दक्षिणां दिशम् ॥

தே முஹூர்தம் ஸமாஶ்வஸ்தா: கிஞ்சித் பக்ந பரிஶ்ரமா: ।
புனரே வோத்யதா: க்ருத்ஸ்நாம் மார்கிதும் தக்ஷிணாம் திஶம் ॥ 21

தே - அவர்கள்
முஹூர்தம் - ஒரு முகூர்த்த காலம்
ஸமாஶ்வஸ்தா: - இளைப்பாறினவர்களாய்



கிஞ்சித் - சிறிது
பக்ந பரிஶ்ரமா: - சிரமம் தீர்ந்தவர்களாய்
தக்ஷிணாம் திஶம் - தென் திக்கை
க்ருத்ஸ்நாம் ஏவ - முழுவதையுமே
புன: - இன்னும்
மார்கிதும் - தேடுவதற்கு
உத்யதா: - கிளம்பினார்கள்.

हनुमत्प्रमुखास्ते तु प्रस्थिताः प्लवगर्षभाः ।
विन्ध्यमेवादितस्तावद्विचेरुस्ते ततस्ततः ॥

ஹநுமத் ப்ரமுகாஸ்தே து ப்ரஸ்திதா: ப்லவகர்ஷபா: ।
விந்த்யமேவாதிதஸ் தாவத் விசேருஸ்தே ததஸ்தத: ॥ 22

தே - அந்த
ஹநுமத் ப்ரமுகா: - ஹனுமாரைத் தலைமையாகவுடைய
ப்லவகர்ஷபா: - வானரோத்தமர்கள்
து - அப்பொழுது
ஆதித: - முதலில்
விந்த்யம் - விந்தியமலைக்கு
ப்ரஸ்திதா: - புறப்பட்டுச் சென்றார்கள்;
தே - அவர்கள்
ததஸ்தத: - எங்கும்
தாவத் - ஒன்றையும் விடாது
விசேரு: - தேடித்திரிந்தார்கள்.

*இத்யார்ஷே ஶ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே*
*ரஜத பர்வத விசயோ நாம ஏகோநபஞ்சாஶ: ஸர்க: ॥*

பஞ்சாஶ: ஸர்க: - 50

सह ताराङ्गदाभ्यां तु संगम्य हनुमान् कपिः ।
विचिनोति स्म विन्ध्यस्य गुहाश्च गहनानि च ॥

ஸஹ தாராங்கதாப்யாம் து ஸங்கம்ய ஹநுமான்கபி: ।
விசி நோதி ஸ்ம விந்த்யஸ்ய குஹாஶ்ச கஹநாநி ச ॥ 1

सिंहशार्दूलजुष्टाश्च शिलाश्च सरितस्तथा ।
विषमेषु नगेन्द्रस्य महाप्रस्रवणेषु च ॥

ஸிம்ஹ ஶார்தூல ஜுஷ்டாஶ்ச ஶிலாஶ்ச ஸரிதஸ்ததா ।
விஷமேஷு நகேந்த்ரஸ்ய மஹா ப்ரஸ்ரவணேஷு ச ॥ 2

கபி: - வானரரான
ஹநுமான் - ஹனுமார்,
தாராங்கதாப்யாம் - தாரன் அங்கதன் இவர்களோடு
ஸஹ து - கூடவே
ஸங்கம்ய - சென்று,
விந்த்யஸ்ய - விந்திய பர்வதத்தினுடைய
குஹா: ச - குகைகளிலும்
கஹநாநி ச - காடுகளிலும்
ஶிலா: ச - பாறைகளிலும்
ததா - அப்படியே
ஸரித: - நதிகளிலும்
நகேந்த்ரஸ்ய - சிறந்த மலையினது
ஸிம்ஹ ஶார்தூல ஜுஷ்டேஷு - சிங்கங்கள் புலிகள் வசிக்கப்பெற்ற
விஷமேஷு - புகமுடியாப் பிரதேசங்களிலும்
மஹா ப்ரஸ்ரவணேஷு ச - பெரும் மலையருவிகளிலும்
விசிநோதிஸ்ம - தேடினார்.

आसेदुस्तस्य शैलस्य कोटिं दक्षिणपश्चिमाम् ।
तेषां तत्रैव वसतां स कालो व्यत्यवर्तत ॥

ஆஸேதுஸ்தஸ்ய ஶைலஸ்ய கோடிம் தக்ஷிணபஶ்சிமாம் ।
தேஷாம் தத்ரைவ வஸதாம் ஸ காலோ வ்யத்யவர்தத ॥ 3

தஸ்ய - அந்த
ஶைலஸ்ய - மலையினுடைய
தக்ஷிண பஶ்சிமாம் - தென்மேற்கு
கோடிம் - சிகரத்தை
ஆஸேது: - அடைந்தார்கள்.
தத்ர ஏவ - அவ்விடத்திலேயே
வஸதாம் - காலங்கழிக்கும்



தேஷாம் - அவர்களுக்கு
ஸ: - அந்த
கால: அபி - தவணைக்காலமும்
அத்ய வர்தத - கழிந்துவிட்டது.

स हि देशो दुरन्वेषो गुहागहनवान् महान् ॥

ஸ ஹி தேஶோ துரன்வேஷோ குஹாகஹனவான் மஹான் ॥ 4

ஹி - ஏனென்றால்
ஸ: தேஶ: - அந்த இடமானது
துரன்வேஷ: - தேடக்கஷ்டமானது,
குஹாகஹனவான் - குகைகளும் காடுகளுமடர்ந்தது,
மஹான் - மிகப்பெரியது.

तत्र वायुसुतः सर्वं विचिनोति स्म पर्वतम् ।
परस्परेण हनुमानन्योन्यस्याविदूरतः ॥

தத்ர வாயுஸுத: ஸர்வம் விசிநோதி ஸ்ம பர்வதம் ।
பரஸ்பரேண ஹனுமான் அன்யோந்யஸ்யா விதூரத: ॥ 5

தத்ர - அப்பொழுது
வாயுஸுத: - வாயுவின் புதல்வரான
ஹநுமான் - ஹனுமார்
பர்வதம் - மலை
ஸர்வம் - எல்லாவற்றையும்
பரஸ்பரேண - ஒருவரைவிட்டொருவர்
அன்யோந்யஸ்ய
அவிதூரத: - பிரியாதபடி
விசிநோதிஸ்ம - தேடினார்.

गजो गवाक्षो गवयः शरभो गन्धमादनः ।
मैन्दश्च द्विविदश्चैव सुषेणो जाम्बवान्नलः ॥

கஜோ கவாக்ஷோ கவய: ஶரபோ கந்தமாதன: ।
மைந்தஶ்ச த்வி விதஶ் சைவ ஸுஷேணோ ஜாம்பவான் நள: ॥ 6

अङ्गदो युवराजश्च तारश्च वनगोचरः ।
गिरिजालावृतान् देशान् मार्गित्वा दक्षिणां दिशम् ॥

அங்கதோ யுவராஜஶ்ச தாரஶ்ச வன கோசர: ।
கிரிஜாலாவ்ருதான் தேஶான் மார்கித்வா தக்ஷிணாம் திஶம் ॥

विचिन्वन्तस्ततस्तत्र ददृशुर्विवृतं बिलम् ॥

விசின்வந்தஸ் ததஸ் தத்ர தத்ருஶுர்விவ்ருதம் பிலம் ॥ 7

கஜ: - கஜனும்,
கவாக்ஷ: - கவாக்ஷனும்,

கவய: - கவயனும்,
ஶரப: - சரபனும்,
கந்தமாதன: - கந்தமாதனனும்,
மைந்த: ச - மைந்தனும்,
த்விவித: ச - த்விவிதனும்,
ஸுஷேண: ஏவ - சுஷேணனும்,
ஜாம்பவான் - ஜாம்பவானும்,
நள: - நளனும்,
யுவராஜ: - யுவராஜாவான
அங்கத: ச - அங்கதனும்,
வனகோசர: - வானரனாகிய
தார: ச - தாரனும்,
கிரிஜாலாவ்ருதான் - மலைத்தொடர்கள் நிறைந்த
தேஶான் - தேசங்களிலும்
மார்கித்வா - தேடி,
தக்ஷிணாம் திஶம் - தென் திசையில்
தத்ரதத: - எல்லாவிடங்களிலும்
விசின்வந்த: - தேடுகின்றவர்களாய்
விவ்ருதம் - வாய் திறந்திருந்த
பிலம் - ஓர் குகையை
தத்ருஶு: - கண்ணுற்றனர்.

दुर्गमृक्षबिलं नाम दानवेनाभिरक्षितम् ।
क्षुत्पिपासापरीताश्च श्रान्ताश्च सलिलार्थिनः ॥
துர்க ம்ருக்ஷபிலம் நாம தானவேநாபி ரக்ஷிதம் ।
க்ஷுத் பிபாஸா பரீதாஶ்ச ஶ்ராந்தாஶ்ச ஸலிலார்தின: ॥
अवकीर्णं लतावृक्षैर्ददृशुस्ते महाबिलम् ॥
அவகீர்ணம் லதாவ்ருக்ஷைர் தத்ருஶுஸ்தே மஹாபிலம் ॥ 8

க்ஷுத் பிபாஸா பரீதா:- பசியும் தாகமும் கொண்ட
தே - அவர்கள்
ஶ்ராந்தா: ச - களைப்புற்று
ஸலிலார்தின: - தாகவிடாய் கொண்டவர்களாய்
து - அப்பொழுது
துர்கம் - புகமுடியாது,
தானவேந - அசுரனால்
அபிரக்ஷிதம் - பாதுகாக்கப்பட்ட
ருக்ஷபிலம் - ரிக்ஷபிலம்
நாம - என்ற
மஹாபிலம் - பெரிய குகையை
லதா வ்ருக்ஷை: - கொடிகளாலும் மரங்களாலும்



அவகீர்ணம் - நிறைந்ததாய்
தத்ருஶு: - கண்டார்கள்.

ततः क्रौञ्चाश्च हंसाश्च सारसाश्चापि निष्क्रमन् ।
जलार्द्राश्चक्रवाकाश्च रक्ताङ्गाः पद्मरेणुभिः ॥
தத: க்ரௌஞ்சாஶ்ச ஹம்ஸாஶ்ச ஸாரஸாஶ்சாபி நிஷ்க்ரமன் ।
ஜலார்த்ராஶ்சக்ரவாகாஶ்ச ரக்தாங்கா: பத்மரேணுபி: ॥ 9

தத: - பிறகு
பத்மரேணுபி: - தாமரைத் தாதுக்களால்
ரக்தாங்கா: - சிவந்த உடலுடைய
க்ரௌஞ்சா: ச - கிரௌஞ்ச பக்ஷிகளும்,
ஹம்ஸா: ச - அன்னங்களும்,
ஸாரஸா: ச அபி - ஸாரஸங்களும்,
சக்ரவாகா: ச - சக்கிரவாகங்களும்,
ஜலார்த்ரா: - நீரில் நனைந்தவைகளாய்
நிஷ்க்ரமன் - வெளிவந்தன.

ततस्तद्बिलमासाद्य सुगन्धि दुरतिक्रमम् ।
विस्मयव्यग्रमनसो बभूवुर्वानरर्षभाः ॥
ததஸ்தத் பில மாஸாத்ய ஸுகந்தி துரதிக்ரமம் ।
விஸ்மயவ்யக்ரமனஸோ பபூவுர்வானரர்ஷபா: ॥ 10

வானரர்ஷபா: - வானரோத்தமர்கள்
தத் - அந்த
பிலம் - குகையை
துரதிக்ரமம் - புகக் கஷ்டமானதாகவும்,
ஸுகந்தி: - நறுமணம் கமழ்கின்றதாகவும்
ஆஸாத்ய - கண்டு,
தத: - அதனால்
விஸ்மய வ்யக்ர மனஸ:- ஆச்சர்யத்திலீடுபட்ட மனத்தினர்களாய்
பபூவு: - ஆனார்கள்.

संजातपरिशङ्कास्ते तद्बिलं प्लवगोत्तमाः ।
अभ्यपद्यन्त संहृष्टास्तेजोवन्तो महाबलाः ॥
ஸஞ்ஜாதபரி ஶங்காஸ்தே தத்பிலம் ப்லவ கோத்தமா: ।
அப்யபத்யந்த ஸம் ஹ்ருஷ்டாஸ் தேஜோ வந்தோ மஹாபலா: ॥ 11

नानासत्त्वसमाकीर्णं दैत्येन्द्रनिलयोपमम् ।
दुर्दर्शमतिघोरं च दुर्विगाहं च सर्वशः ॥
நாநாஸத்வஸமாகீர்ணம் தைத்யேந்த்ர நிலயோபமம் ।
துர்தர்ஶ மதி கோரம் ச துர்விகாஹம் ச ஸர்வஶ: ॥ 12

தே - அந்த
தேஜோ வந்த: - தேஜஸ்விகளும்

மஹாபலா: - மகா ஆற்றலுடையவர்களுமான

ப்லவகோத்தமா: - வானரோத்தமர்கள்

நாநா ஸத்வ ஸமாகீர்ணம் - பலவகை உயிர்க்கூட்டங்கள் நிறைந்ததும்

தைத்யேந்த்ர நிலயோபமம் - அசுரனது மாளிகை போன்றதும்

துர்தர்ஶம் - கண்கொண்டு பார்க்கக்கூடாது

அதிகோரம் ச - மிக அச்சத்தைத் தருவதும்

ஸர்வஶ: - எவ்வற்றாலும்

துர்விகாஹம் ச - உட்புக முடியாததுமான

தத் - அந்த

பிலம் - பிலத்தை

ஸஞ்ஜாத பரிஶங்கா: - கலவரம் கொண்டவர்களாய்

அஸம்ஹ்ருஷ்டா: - உத்ஸாகம் குன்றியவர்களாய்

அப்யபத்யந் - அடைந்தார்கள்.

ततः पर्वतकूटाभो हनुमान् पवनात्मजः ।

अब्रवीद्वानरान् सर्वान् कान्तारवनकोविदः ॥

தத: பர்வதகூடாபோ ஹநுமான் பவநாத்மஜ: ।

அப்ரவீத் வானரான் ஸர்வான் காந்தார வனகோவித: ॥ 13

தத: - அவ்விடத்தில்

பர்வத கூடாப: - பர்வத சிகரத்தை நிகர்த்தவரும்

பவநாத்மஜ: - வாயுகுமாரரும்

காந்தார வன கோவித: - குகைகளையும் வனங்களையும் நன்கறிந்தவருமாகிய

ஹநுமான் - ஹனுமார்

வானரான் - வானரர்கள்

ஸர்வான் - எல்லோரையும் பார்த்து

அப்ரவீத் - பின்வருமாறு சொன்னார்.

गिरिजालावृतान् देशान् मार्गित्वा दक्षिणां दिशम् ।

वयं सर्वे परिश्रान्ता न च पश्याम मैथिलीम् ॥

கிரிஜாலாவ்ருதான் தேஶான் மார்கித்வா தக்ஷிணாம் திஶம் ।

வயம் ஸர்வே பரிஶ்ராந்தா ந ச பஶ்யாம மைதிலீம் ॥ 14

தக்ஷிணாம் - தென்

திஶம் - திக்கில்

கிரிஜாலாவ்ருதான் - மலைத்தொடர்கள் நிறைந்த

தேஶான் - இடங்களை

மார்கித்வா - தேடிவிட்டு,

வயம் - நாம்

ஸர்வே - எல்லோரும்

பரிஶ்ராந்தா: - களைப்படைந்து விட்டோம்;

ச - ஆயினும்

மைதிலீம் - ஜானகீதேவியாரை

பஶ்யாம: ந - நாம் காணப்பெறவில்லை.



अस्माच्चापि बिलाद्धंसाः क्रौञ्चाश्च सह सारसैः ।

जलार्द्राश्चक्रवाकाश्च निष्पतन्ति स्म सर्वशः ॥

அஸ்மாச்சாபி பிலாத்ஹம்ஸா: க்ரௌஞ்சாஶ்ச ஸஹ ஸாரஸை: ।

ஜலார்த்ராஶ் சக்ரவாகாஶ்ச நிஷ்பதந்தி ஸ்ம ஸர்வஶ: ॥ 15

அஸ்மாத் - இந்த

பிலாத் அபி - பிலத்திலிருந்தோ

ஸாரஸை: ஸஹ ச - ஸாரஸங்களோடு கூடவே

ஸர்வஶ: - நாற்புறத்தினின்றும்

ஜலார்த்ரா: - ஜலத்தால் நனைந்த

ஹம்ஸா: - ஹம்ஸங்களும்

க்ரௌஞ்சா: - கிரௌஞ்சங்களும்

சக்ரவாகா: ச - சக்கிரவாகங்களும்

நிஷ்பதந்தி ஸ்ம - வெளியில் வருகின்றன.

नूनं सलिलवानत्र कूपो वा यदि वा ह्रदः ।

तथा चेमे बिलद्वारे स्निग्धास्तिष्ठन्ति पादपाः ॥

நூநம் ஸலிலவாநத்ர கூபோ வா யதி வா ஹ்ரத: ।

ததா சேமே பிலத்வாரே ஸ்நிக்தாஸ்திஷ்டந்தி பாதபா: ॥ 16

அத்ர - இதில்

ஸலிலவாந் - நீருள்ள

கூப: வா - ஒரு கிணறு

யதி வா - அல்லது

ஹ்ரத: - ஒரு மடுவோ இருக்கிறது,

நூநம் - நிச்சயம்.

ததா ச - ஆதலால்தான்

பிலத்வாரே - பிலத்தின் வாயிலில்

இமே பாதபா: - இந்த விருக்ஷங்கள்

ஸ்நிக்தா: - செழித்தவைகளாய்

திஷ்டந்தி - இருக்கின்றன.

इत्युक्तास्तद्बिलं सर्वे विविशुस्तिमिरावृतम् ।

अचन्द्रसूर्यं हरयो ददृशू रोमहर्षणम् ॥

இத்யுக்தாஸ் தத்பிலம் ஸர்வே விவிஶுஸ்திமிராவ்ருதம் ।

அசந்த்ர ஸூர்யம் ஹரயோ தத்ருஶூ ரோமஹர்ஷணம் ॥ 17

ஹரய: - வானரர்கள்

ஸர்வே - எல்லோரும்

இதி - மேற்சொல்லியதை

உக்த்வா - ஆலோசித்து,

| | | |
|---|---|---|
| தத் | - | அந்த |
| பிலம் | - | பிலத்தினுள் |
| விவிஶு: | - | புகுந்தார்கள். |
| ரோமஹர்ஷணம் | - | மயிர்கூச்செறியும்படி பயந்தருவதாய் |
| அசந்த்ர ஸூர்யம் | - | சந்திரசூரியர்களில்லாது |
| திமிராவ்ருதம் | - | இருளடர்ந்ததாய் |
| தத்ருஶு: | - | கவனித்தார்கள். |

निशाम्य तस्मात् सिंहांश्च तांस्तांश्च मृगपक्षिण: ।
प्रविष्टा हरिशार्दूला बिलं तिमिरसंवृतम् ॥

நிஶாம்ய தஸ்மாத் ஸிம்ஹாம்ஶ்ச தாம்ஸ்தாம்ஶ்ச ம்ருகபக்ஷிண: ।
ப்ரவிஷ்டா ஹரிஶார்தூலா பிலம் திமிரஸம் வ்ருதம் ॥ 18

| | | |
|---|---|---|
| தஸ்மாத் | - | அவ்விடத்திலிருந்து |
| ஹரிஶார்தூலா: | - | வானரோத்தமர்கள் |
| ஸிம்ஹான் | - | சிங்கங்களையும் |
| வ்யாக்ரான் ச | - | புலிகளையும் |
| ம்ருகபக்ஷிண: | - | மிருகங்களையும் பக்ஷிகளையும் |
| நிஶாம்ய | - | பார்த்துக்கொண்டே, |
| திமிரஸம்வ்ருதம் | - | இருள்மூடிய |
| பிலம் | - | பிலத்தினுள் |
| ப்ரவிஷ்டா: | - | சென்றார்கள். |

न तेषां सज्जते चक्षुर्न तेजो न पराक्रम: ।
वायोरिव गतिस्तेषां दृष्टिस्तमसि वर्तते ॥

ந தேஷாம் ஸஜ்ஜதே சக்ஷுர் ந தேஜோ ந பராக்ரம: ।
வாயோரிவ கதிஸ் தேஷாம் த்ருஷ்டிஸ்தமஸி வர்ததே ॥ 19

| | | |
|---|---|---|
| தேஷாம் | - | அவர்களுக்கு |
| சக்ஷு: | - | கண் பார்வையானது |
| ஸஜ்ஜதே ந | - | தடைபடவில்லை. |
| தேஜ: | - | ஒளியும் |
| ந | - | தடைபடவில்லை. |
| பராக்ரம: | - | ஆண்மையும் |
| ந | - | தடைபடவில்லை, |
| தேஷாம் | - | அவர்களுடைய |
| கதி: | - | சஞ்சாரமோ |
| வாயோ: | - | வாயுவினது |
| இவ | - | போலிருந்தது. |
| தமஸி | - | இருளில் |
| த்ருஷ்டி: | - | கட்புலனுக்கு வெளிச்சமானது |
| வர்ததே | - | இருக்கிறது. |



ते प्रविष्टास्तु वेगेन तद्बिलं कपिकुञ्जरा: ।
प्रकाशमभिरामं च ददृशुर्देशमुत्तमम् ॥

தே ப்ரவிஷ்டாஸ்து வேகேந தத்பிலம் கபிகுஞ்ஜரா: ।
ப்ரகா ஶமபிராமம் ச தத்ருஶுர்தேஶ முத்தமம் ॥ 20

| | | |
|---|---|---|
| தே | - | அந்த |
| கபிகுஞ்ஜரா: | - | வானரோத்தமர்கள் |
| வேகேந து | - | தைரியத்தோடேயே |
| தத் | - | அந்த |
| பிலம் | - | பில்த்தினுள் |
| ப்ரவிஷ்டா: | - | சென்றவர்களாய் |
| தேஶம் | - | ஓரிடத்தை |
| உத்தமம் | - | சிறந்ததாயும் |
| ப்ரகாஶம் | - | வெளிச்சமாயிருப்பதாயும் |
| அபிராமம் ச | - | அழகாயிருப்பதாயும் |
| தத்ருஶு: | - | பார்த்தார்கள். |

ततस्तस्मिन् बिले दुर्गे नानापादपसंकुले ।
अन्योन्यं संपरिष्वज्य जग्मुर्योजनमन्तरम् ॥

ததஸ்தஸ்மின் பிலே துர்கே நாநாபாதபஸங்குலே ।
அன்யோன்யம் ஸம்பரிஷ்வஜ்ய ஜக்முர் யோஜன மந்தரம் ॥ 21

| | | |
|---|---|---|
| தத: | - | அதற்கப்பால் |
| நாநாபாதப ஸங்குலே | - | பலவகை மரங்கள் நிறைந்த |
| துர்கே | - | புகுவதற்குக் கஷ்டமாயிருந்த |
| தஸ்மின் | - | அந்த |
| பிலே | - | பிலத்தில் |
| யோஜனம் அந்தரம் | - | எட்டுமைல் தூரம் |
| அன்யோன்யம் | - | ஒருவரை ஒருவர் |
| ஸம்பரிஷ்வஜ்ய | - | இறுகக் கட்டிக்கொண்டு, |
| ஜக்மு: | - | சென்றார்கள். |

ते नष्टसंज्ञास्तृषिता संभ्रान्ता: सलिलार्थिन: ।
परिपेतुर्बिले तस्मिन् कंचित्कालमतन्द्रिता: ॥

தே நஷ்டஸம்க்ஞாஸ் த்ருஷிதா: ஸம்ப்ராந்தா: ஸலிலார்திந: ।
பரிபேதுர் பிலே தஸ்மின் கஞ்சித் கால மதந்த்ரிதா: ॥ 22

| | | |
|---|---|---|
| தே | - | அவர்கள் |
| நஷ்டஸம்க்ஞா: | - | அறிவிழந்து |
| த்ருஷிதா: | - | தாகமுற்று |
| ஸம்ப்ராந்தா: | - | கலவரப்பட்டு |

ஸலிலார்திந: - தீர்த்தத்தை வேண்டியவர்களாய்
கஞ்சித் - சிறிது
காலம் - காலம்
அதந்த்ரிதா: - வேண்டிய முயற்சி கொண்டு
தஸ்மின் - அந்த
பிலே - பிலத்தில்
பரிபேது: - சென்றார்கள்.

ते कृशा दीनवदनाः परिश्रान्ताः प्लवङ्गमाः ।
आलोकं ददृशुर्वीरा निराशा जीविते तदा ॥

தே க்ருஶா தீனவதநா: பரிஶ்ராந்தா: ப்லவங்கமா: ।
ஆலோகம் தத்ருஶுர்வீரா நிராஶா ஜீவிதே ததா ॥ 23

க்ருஶா: - துவண்டு
தீனவதநா: - முகம்வாடி
ததா - அப்பொழுது
ஜீவிதே - உயிரில்
நிராஶா: - ஆசையை ஒழித்து
பரிஶ்ராந்தா: - களைப்படைந்திருந்த
தே - அந்த
ப்லவங்கமா: வீரா: - வானர வீரர்கள்
ஆலோகம் - ஓர் ஒளியை
தத்ருஶு: - கண்டார்கள்.

ततस्तं देशमागम्य सौम्यं वितिमिरं वनम् ।
ददृशुः काञ्चनान् वृक्षान् दीप्तवैश्वानरप्रभान् ॥

ததஸ்தம் தேஶ மாகம்ய ஸௌம்யம் விதிமிரம் வனம் ।
தத்ருஶு: காஞ்சனான் வ்ருக்ஷாந்தீப்த வைஶ்வாநர ப்ரபான் ॥ 24

सालांस्तालांश्च पुंनागान् ककुभान् वञ्जुलान् धवान् ।
चम्पकान्नागवृक्षांश्च कर्णिकारांश्च पुष्पितान् ॥

ஸாலாந் தாலாம்ஶ்ச புன்னாகான் ககுபான் வஞ்ஜுளான் தவான் ।
சம்பகாந் நாக வ்ருக்ஷாம்ஶ்ச கர்ணிகாராம்ஶ்ச புஷ்பிதான் ॥ 25

स्तबकैः काञ्चनैश्चित्रैः रक्तैः किसलयैस्तथा ।
आपीडैश्च लताभिश्च हेमाभरणभूषितान् ॥

ஸ்தபகை: காஞ்சனைஶ்சித்ரை: ரக்தை: கிஸலயைஸ்ததா ।
ஆபீடைஶ்ச லதாபிஶ்ச ஹேமாபரண பூஷிதான் ॥ 26

तरुणादित्यसंकाशान् वैदूर्यमयवेदिकान् ।
विभ्राजमानान् वपुषा पादपांश्च हिरण्मयान् ॥



தருணாதித்யஸங்காஶான் வைடூர்ய மய வேதிகான் ।
விப்ராஜமானான் வபுஷா பாதபாம்ஶ்ச ஹிரண்மயான் ॥ 27

नीलवैदूर्यवर्णाश्च पद्मिनीः पतगावृताः ।
महद्भिः काञ्चनैः पद्मैर्वृता बालार्कसंनिभैः ॥

நீலவைடூர்ய வர்ணாஶ்ச பத்மினீ: பதகாவ்ருதா: ।
மஹத்பி: காஞ்சனை: பத்மைர்வ்ருதா பாலார்கஸந்நிபை: ॥ 28

தத: - அப்பொழுது
தம் - அந்த
ஸௌம்யம் - அழகியதும்
விதிமிரம் - இருளற்றதுமான
வனம் தேஶம் - வன பிரதேசத்தை
ஆகம்ய - அடைந்து
தீப்த வைஶ்வா நரப்ரபான் - ஜ்வலிக்கும் அக்னியை நிகர்த்த
காஞ்சனான் - பொன்
வ்ருக்ஷாந் - மரங்களையும்,
ஸாலாந் - ஆச்சா மரங்களையும்,
தாலான் ச - பனை மரங்களையும்,
புன்னாகான் - புன்னை மரங்களையும்,
ககுபான் - மருது மரங்களையும்,
வஞ்ஜுளான் - மகிழ மரங்களையும்,
தவான் - தவமரங்களையும்,
சம்பகாந் - சம்பக மரங்களையும்,
நாக வ்ருக்ஷான் ச - சிறுநாக மரங்களையும்,
புஷ்பிதான் - பூத்த
கர்ணிகாரான் ச - சரக்கொன்றை மரங்களையும்,
சித்ரை: - அழகிய
காஞ்சனை: - பொன்
ஸ்தபகை: - பூங்கொத்துக்களாலும்,
ரக்தை: - செவ்விய
கிஸலயை: ததா - தளிர்களாலும்,
ஆபீடை: ச - மாலைகளாலும்,
லதாபி: ச - கொடிகளாலும்
வபுஷா - ஒளிகொண்டு
விப்ராஜமானான் - பிரகாசிக்கின்றவைகளும்,
ஹேமாபரண பூஷிதான்- பொன்னாபரணங்கள் பூண்டவைகளும்,
தருணாதித்ய ஸங்காஶான்-உதயசூரியனை நிகர்த்தவைகளும்
வைடூர்ய மயவேதிகான்- வைடூர்ய ரத்னமயமான மேடைகளுற்றவைகளுமான
ஹிரண்மயான் - காஞ்சன
பாதபான் ச - மரங்களையும்
பாலார்க ஸந்நிபை: -பாலசூரியனை நிகர்த்த

காஞ்சனை: - பொன்மயமான
மஹத்பி: - நலமிக்க
பத்மை: - நளினங்களால்
வ்ருதா: - நிறையப்பெற்றவைகளும்
நீல வைடூர்ய வர்ணா: ச- இந்திரநீலம் வைடூர்யம் இவைகள் காந்தி கொண்டவைகளும்
பதகா வ்ருதா: - புள்ளினங்கள் பொலிந்தவைகளுமான
பத்மினீ: - தாமரையோடைகளையும்
தத்ருஶு: - கண்ணுற்றனர்.

**जातरूपमयैर्मत्स्यैर्महद्भिश्च सकच्छपैः ।**
**नलिनीस्तत्र ददृशुः प्रसन्नसलिलायुताः ॥**

ஜாதரூப மயைர் மத்ஸ்யைர் மஹத்பிஶ்ச ஸகச்சபை: ।
நளிநீஸ்தத்ர தத்ருஶு: ப்ரஸந்ந ஸலிலா யுதா: ॥ 29

தத்ர - அவ்விடத்தில்
ஸ கச்சபை: - ஆமைகளோடு கூடியவைகளும்
ஜாத ரூப மயை: ச - பொன்மயமானவைகளுமான
மஹத்பி: - பெரிய
மத்ஸ்யை: - மீன்களால்
ப்ரஸந்ந ஸலிலா யுதா:- மாசற்ற நீரையுடைய
நளிநீ: - தாமரையோடைகளை
தத்ருஶு: - கண்டார்கள்.

**काञ्चनानि विमानानि राजतानि तथैव च ।**
**तपनीयगवाक्षाणि मुक्ताजालावृतानि च ॥**

காஞ்சநாநி விமாநாநி ராஜதாநி ததைவ ச ।
தபநீய கவாக்ஷாணி முக்தாஜாலாவ்ருதாநி ச ॥ 30

**हैमराजतभौमानि वैदूर्यमणिमन्ति च ।**
**ददृशुस्तत्र हरयो गृहमुख्यानि सर्वशः ॥**

ஹைம ராஜத பௌமானி வைடூர்ய மணிமந்தி ச ।
தத்ருஶுஸ் தத்ர ஹரயோ க்ருஹமுக்யானி ஸர்வஶ: ॥ 31

ஹரய: - வானரர்கள்
தத்ர - அவ்விடத்தில்
ஸர்வஶ: - எங்கும்
காஞ்சநாநி - பொன்மயமானவைகளும்
ததா ஏவ - அப்படியேதான்
ராஜதாநி - வெள்ளிமயமானவைகளும்,
தபநீய கவாக்ஷாணி - பொன்னாற்செய்த பலமணிகளைஉடையவைகளும்,



முக்தாஜாலாவ்ருதாநி ச - முத்துவடங்கள் தொங்கவிடப்பட்டவைகளுமான
விமாநாநி ச - விமானங்களையும்
ஹைம ராஜத பௌமானி-தங்கத்தாலும் வெள்ளியாலுமான மாளிகைகளின் அடுக்குள்ளவைகளும்
வைடூர்ய மணிமந்தி ச- வைடூர்யக் கற்பதிக்கப்பட்டவைகளுமான
க்ருஹமுக்யானி ச - சிறந்த மாளிகைகளையும்
தத்ருஶு: - கண்டார்கள்.

**पुष्पितान् फलिनो वृक्षान् प्रवालमणिसन्निभान् ।**
**काञ्चनभ्रमरांश्चैव मधूनि च समन्ततः ॥**

புஷ்பிதான் பலிநோ வ்ருக்ஷான் ப்ரவால மணி ஸந்நிபான் ।
காஞ்சன ப்ரமராம் ஶ்சைவ மதூநி ச ஸமந்தத: ॥ 32

**मणिकाञ्चनचित्राणि शयनान्यासनानि च ।**
**महार्हाणि च यानानि ददृशुस्ते समन्ततः ॥**

மணி காஞ்சன சித்ராணி ஶயநாந்யாஸநாநி ச ।
மஹார்ஹாணி ச யாநாநி தத்ருஶுஸ்தே ஸமந்தத: ॥ 33

**हैमराजतकांस्यानां भाजनानां च संचयान् ।**
**अगरूणां च दिव्यानां चन्दनानां च संचयान् ॥**

ஹைமராஜதகாம்ஸ்யாநாம் பாஜநாநாம் ச ஸஞ்சயான் ।
அகரூணாம் ச திவ்யாநாம் சந்தநாநாம் ச ஸஞ்சயான் ॥ 34

**शुचीन्यभ्यवहार्याणि मूलानि च फलानि च ।**
**महार्हाणि च पानानि मधूनि रसवन्ति च ॥**

ஶுசீன்யப்யவஹார்யாணி மூலாநி ச பலாநி ச ।
மஹார்ஹாணி ச பாநாநி மதூனி ரஸவந்தி ச ॥ 35

**दिव्यानामम्बराणां च महार्हाणां च संचयान् ।**
**कम्बलानां च चित्राणामजिनानां च संचयान् ॥**

திவ்யாநாமம்பராணாம் ச மஹார்ஹாணாம் ச ஸஞ்சயான் ।
கம்பலாநாம் ச சித்ராணா மஜிநாநாம் ச ஸஞ்சயான் ॥ 36

ஸமந்தத: - எல்லாவிடங்களிலும்
தே - அவர்கள்
புஷ்பிதான் - நன்கு பூத்தவைகளும்
பலிந: - பழங்களைத் தருகின்றவைகளும்
ப்ரவால மணி - பவழம் மாணிக்கம் இவைகளை
ஸந்நிபான் நிகர்த்தவைகளுமான
வ்ருக்ஷான் ச - விருக்ஷங்களையும்

காஞ்சன ப்ரமரான் ஏவ - பொன் வண்டுகளையும்
வதூநி ச - சிறு பெண்களையும் (ஆர்ஷம்)
ஸமந்தத: - எங்கும்
மணிகாஞ்சன சித்ராணி - மணிகளிழைத்த பொன்னாலான பலவகையான
ஶயநாநி ச - படுக்கைகளையும்
ஆஸநாநி - ஆசனங்களையும்
மஹார்ஹாணி - மிக விலையுயர்ந்த
யாநாநி ச - வாகனங்களையும்
ஹைம ராஜத - பொன்னாலும் வெள்ளியாலும்
காம்ஸ்யாநாம் வெண்கலத்தினாலுமான
பாஜநாநாம் - பாத்திரங்களுடைய
ஸஞ்சயான் ச - குவியல்களையும்
அகரூணாம் ச - அகில்களுடையவும்
திவ்யாநாம் - திவ்யமயமான
சந்தநாநாம் - சந்தனங்களுடைய
ஸஞ்சயான் ச - குவியல்களையும்
ஶுசீனி - பரிசுத்தமானவைகளும்
அப்யவ ஹார்யாணி - உணவுக்கு யோக்யமான
மூலாநி ச - கிழங்குகளையும்
பலாநி ச - பழங்களையும்
மஹர்ஹாணி - சிறந்த
பாநாநி ச - பானங்களையும்
ரஸவந்தி - இனிய
மதூனி ச - தேன்களையும்
திவ்யாநாம் - திவ்யமான
மஹார்ஹாணாம் ச - மிக விலையுயர்ந்த
அம்பராணாம் - ஆடைகளின்
ஸஞ்சயான் ச - குவியல்களையும்,
சித்ராணாம் - அழகிய
கம்பலாநாம் ச - கம்பளங்களுடையவும்
அஜிநாநாம் - தோல்களுடையவும்
ஸஞ்சயான் - குவியல்களையும்
தத்ருஶு: - பார்த்தார்கள்.

तत्र तत्र च विन्यस्तान् दीप्तान् वैश्वानरप्रभान् ।
दद्दृशुर्वानराः शुभ्राञ्जातरूपस्य संचयान् ॥

தத்ர தத்ர ச விந்யஸ்தான் தீப்தான் வைஶ்வாநர ப்ரபான் ।
தத்ருஶுர் வான்ரா: ஶுப்ராஞ்ஜாத ரூபஸ்ய ஸஞ்சயான் ॥ 37



வானரா: - வானரர்கள்
தத்ர தத்ர ச - அங்கங்கே
விந்யஸ்தான் - வைக்கப்பட்டிருக்கும்
வைஶ்வாநரோபமான் - அக்னியை நிகர்த்து
தீப்தான் - ஜ்வலிக்கின்றவைகளும்,
ஶுப்ரான் - சுத்தமானவைகளுமான
ஜாத ரூபஸ்ய ஸஞ்சயான் - பொன்கட்டிக் குவியல்களை
தத்ருஶு: - கண்டார்கள்.

तत्र तत्र विचिन्वन्तो बिले तस्मिन् महाबलाः ।
दद्दृशुर्वानराः शूराः स्त्रियं काचिददूरतः ॥

தத்ர தத்ர விசிந்வந்தோ பிலே தஸ்மின் மஹாபலா: ।
தத்ருஶுர் வாநரா: ஶூரா: ஸ்த்ரியம் காஞ்சித் அதூரத: ॥ 38

தத்ர தத்ர - ஆங்காங்கு
தஸ்மின் - அந்த
பிலே - பிலத்தில்
விசிந்வந்த: - தேடிக்கொண்டிருந்தவர்களும்
மஹாபலா: - அளவுகடந்த ஆற்றலுடையவர்களும்,
ஶூரா: - சூரர்களுமான
வாநரா: - வானரர்கள்,
அதூரத: - சமீபத்தில்
காஞ்சித் - ஏதோ ஒரு
ஸ்த்ரியம் - ஸ்திரீயை
தத்ருஶு: - கண்டார்கள்.

तां दृष्ट्वा भृशसंत्रस्ताश्चीरकृष्णाजिनाम्बराम् ।
तापसीं नियताहारां ज्वलन्तीमिव तेजसा ॥

தாம் த்ருஷ்ட்வா ப்ருஶஸந்த்ரஸ்தாஶ் சீரக்ருஷ்ணாஜிநாம்பராம் ।
தாபஸீம் நியதா ஹாராம் ஜ்வலந்தீமிவ தேஜஸா ॥ 39

विस्मिता हरयस्तत्र व्यवातिष्ठन्त सर्वशः ॥

விஸ்மிதா ஹரயஸ்தத்ர வ்யவாதிஷ்டந்த ஸர்வஶ: ॥ 40

தத்ர - அவ்விடத்தில்
ஹரய: - வானரர்கள்
தாம் - அவளை
சீரக்ருஷ்ணாஜிநாம்பராம் - மரவுரியையும் மான் தோலையுமுடுத்தவளாய்
தாபஸீம் - துறவியாய்
நியதாஹாராம் - உணவைச் சுருக்கி
தேஜஸா - ஒளியால்

ஜ்வலந்தீம் இவ - எரிக்கின்றவள் போலிருக்கிறவளாய்
த்ருஷ்ட்வா - கண்டு,
தத்ர - அப்பொழுது
ஹரய: - வானரர்கள்
ஸர்வஶ: - எல்லோருமே
விஸ்மிதா: - ஆச்சர்யமடைந்தவர்களாய்
வ்யவாதிஷ்டந்த - அசையாது நின்றுவிட்டார்கள்.

ततो हनूमान् गिरिसंनिकाशः कृताञ्जलिस्तामभिवाद्य वृद्धाम् ।
पप्रच्छ का त्वं भवनं बिलं च रत्नानि हेमानि वदस्व कस्य ॥

ததோ ஹநூமான் கிரிஸந்நிகாஶ:
க்ருதாஞ்ஜலிஸ் தாமபிவாத்ய வ்ருத்தாம் ।
பப்ரச்ச கா த்வம் பவனம் பிலம் ச
ரத்நாநி ஹேமானி வதஸ்வ கஸ்ய ॥ 41

தத: - அப்பொழுது
கிரிஸந்நிகாஸ: - மலையை நிகர்த்த
ஹநூமான் - ஹனுமார்
க்ருதாஞ்ஜலி: - கைகூப்பிக்கொண்டு
வ்ருத்தாம் - வயது முதிர்ந்த
தாம் - அவளை
அபிவாத்ய - சேவித்து,
பப்ரச்ச - பின்வருமாறு வினாவினார்.
த்வம் - 'நீவிர்
கா - யார்?
பவனம் - மாளிகையும்
பிலம் ச - பிலமும்
ஏதானி - இந்த
ரத்நாநி ச - ரத்னங்களும்
கஸ்ய - யாருடையது.
வதஸ்வ - பதில் சொல்லி அருள்வீராக.'

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*துர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே*
*ருக்ஷபில ப்ரவேஶோ நாம பஞ்சாஶ: ஸர்க: ॥*



ஏக பஞ்சாஶ: ஸர்க: - 51

इत्युक्त्वा हनुमांस्तत्र पुनः कृष्णाजिनाम्बराम् ।
अब्रवीत्तां महाभागां तापसीं धर्मचारिणीम् ॥

இத்யுக்த்வா ஹநுமான் தத்ர புன: க்ருஷ்ணா ஜிநாம்பராம் ।
அப்ரவீத்தாம் மஹாபாகாம் தாபஸீம் தர்மசாரிணீம் ॥ 1

ஹநுமான் - ஹனுமார்
இதி - மேற்கண்டவாறு
உக்த்வா - வினாவி,
தத்ர - அப்பொழுது
க்ருஷ்ணா ஜிநாம்பராம் - கருமான்தோல் தரித்த
தர்மசாரிணீம் - தருமவழியிலொழுகும்
மஹாபாகாம் - கருணை நிறைந்த
தாபஸீம் - தாபஸியான
தாம் - அவளைப் பார்த்து
புன: - மீளவும்
அப்ரவீத் - சொன்னார்.

इदं प्रविष्टाः सहसा बिलं तिमिरसंवृतम् ।
क्षुत्पिपासापरिश्रान्ताः परिखिन्नाश्च सर्वशः ॥

இதம் ப்ரவிஷ்டா: ஸஹஸா பிலம் திமிரஸம்வ்ருதம் ।
க்ஷுத் பிபாஸா பரிஶ்ராந்தா: பரிகின்னாஶ்ச ஸர்வஶ: ॥

महद्धरण्या विवरं प्रविष्टाः स्म पिपासिताः ॥

மஹத்தரண்யா விவரம் ப்ரவிஷ்டா: ஸ்ம பிபாஸிதா: ॥ 2

ஸர்வஶ: - நாலா பக்கங்களிலும்
ப்ரவிஷ்டா: - சென்றவர்களாய்
க்ஷுத்பிபாஸா - பசி-தாகம் மேலிட்டதால் மிகக்
பரிஶ்ராந்தா: களைத்தவர்களாய்
பரிகின்னா: - நொந்தவர்களாய்
ச - அதனால்
பிபாஸிதா: - தாகம் தணித்துக் கொள்ளவேண்டியவர்களாய்
தரண்யா: - பூமியின்
விவரம் - மனுஷ்ய சஞ்சாரமற்ற
திமிர ஸம்வ்ருதம் - இருளடர்ந்த
மஹத் - பெரிய
இதம் - இந்த
பிலம் - பிலத்துள்

ஸஹஸா - திடீரென
ப்ரவிஷ்டா: ஸ்ம - புகுந்தோம்.

इमांस्त्वेवंविधान् भावान् विविधानद्भुतोपमान् ।
दृष्ट्वा वयं प्रव्यथिताः संभ्रान्ता नष्टचेतसः ॥

இமான் த்வேவம் விதான் பாவாந் விவிதாநத் புதோபமான் ।
த்ருஷ்ட்வா வயம் ப்ரவ்யதிதா: ஸம்ப்ராந்தா நஷ்டசேதஸ: ॥ 3

இமான் - இந்த
விவிதாந் - விதவிதங்களான
அத்புதோர்பமான் - உவமை சொல்வதற்கரியனவான
ஏவம் விதான் - இதுவரையில் பார்த்திராத
பாவாந் - பதார்த்தங்களை
து - அப்பொழுது
த்ருஷ்ட்வா - பார்த்து,
வயம் - நாங்கள்
ப்ரவ்யதிதா: - மிகத் திகிலடைந்தவர்களாய்
ஸம்ப்ராந்தா: - தலை கிருகிருவென்று சுற்றினவர்களாய்
நஷ்டசேதஸ: - அறிவிழந்தவர்களானோம்.

कस्यैते काञ्चना वृक्षास्तरुणादित्यसंनिभाः ।
इमे जाम्बूनदमयाः पादपाः कस्य तेजसा ॥

கஸ்யைவ காஞ்சநா வ்ருக்ஷாஸ்தருணாதித்ய ஸந்நிபா: ।
இமே ஜாம்பூநதமயா: பாதபா: கஸ்ய தேஜஸா ॥ 4

शुचीन्यभ्यवहार्याणि मूलानि च फलानि च ।
काञ्चनानि विमानानि राजतानि गृहाणि च ॥

ஶுசீன் யப்ய வஹார்யாணி மூலாநி ச பலாநி ச ।
காஞ்சநாநி விமாநாநி ராஜதானி க்ருஹாணி ச ॥ 5

तपनीयगवाक्षाणि मणिजालावृतानि च ।
काञ्चनानि च पद्मानि जातानि विमले जले ॥

தபநீய கவாக்ஷாணி மணிஜாலாவ்ருதாநி ச ।
காஞ்சநாநி ச பத்மானி ஜாதாநி விமலே ஜலே ॥ 6

தருணாதித்ய ஸந்நிபா: - உதித்த சூரியனுக்கு நிகரான
இமே - இந்த
காஞ்சநா: - ப்ரகாசிக்கும்
வ்ருக்ஷா: - மரங்கள்
கஸ்ய - யாருடையது?
ச - மேலும்,



இமே - இந்த
ஜாம்பூநதமயா: - தங்கத்தால் செய்யப்பட்ட
பாதபா: - விருக்ஷங்களும்
ஶுசீனி - பரிசுத்தங்களான
அப்ய வஹார்யாணி - உணவிற்குரியனவான
மூலாநி ச - கிழங்குகளும்
பலாநி ச - பழங்களும்
காஞ்சநாநி - பொன்மயமான
விமாநாநி - விமானங்களும்
மணிஜாலா வ்ருதாநி ச - இரத்தின வலைகள் கட்டின
தபநீய கவாக்ஷாணி - கண்களைப் பறிக்கக்கூடிய காந்தி பொருந்திய பொற்பலகணிகளையுடைய
ராஜதானி - வெள்ளிமயமான
க்ருஹாணி ச - வீடுகளும்
விமலே - நிர்மலமான
ஜலே - ஜலத்தில்
காஞ்சநாநி - பொன்மயமான
பத்மானி ச - தாமரைகளும்,
கஸ்ய - யாருடைய
தேஜஸா - தெய்வ சக்தியால்
ஜாதாநி - உண்டாயின?

कथं मत्स्याश्च सौवर्णाश्चरन्ति सह कच्छपैः ॥

கதம் மத்ஸ்யாஶ்ச ஸௌவர்ணாஶ்சரந்தி ஸஹ கச்சபை: ॥ 7

கச்சபை: ஸஹ - ஆமைகளோடு
மத்ஸ்யா: ச - மீன்களும்
ஸௌவர்ணா: - பொன்மயமாகி
கதம் - எப்படி
சரந்தி - ஸஞ்சரிக்கின்றன.

आत्मानमनुभावं च कस्य चैतत्तपोबलम् ।
अजानतां नः सर्वेषां सर्वमाख्यातुमर्हसि ॥

ஆத்மாநமநுபாவம் ச கஸ்ய சைதத் தபோபலம் ।
அஜாநதாம் ந: ஸர்வேஷாம் ஸர்வ மாக்யாது மர்ஹஸி ॥ 8

ஏதத் - இது
கஸ்ய - யாருடைய
தபோபலம் - தபோபலம்.
ஆத்மாநம் ச - உங்களையும்
அநுபாவம் ச - மஹிமையையும்

அஜாநதாம் - தெரியாதவர்களான
ந: - எங்கள்
ஸர்வேஷாம் - எல்லோருக்கும்
ஸர்வம் - எல்லாவற்றையும்
ஆக்யாதும் அர்ஹஸி - விவரித்துச் சொல்ல வேண்டும்.

एवमुक्ता हनुमता तापसी धर्मचारिणी ।
प्रत्युवाच हनूमन्तं सर्वभूतहिते रता ॥

ஏவமுக்த்தா ஹநுமதா தாபஸீ தர்மசாரிணீ।
ப்ரத்யுவாச ஹநூமந்தம் ஸர்வபூத ஹிதே ரதா ॥ 9

ஸர்வபூதஹிதே - எல்லாப் பிராணிகளின் நன்மையிலேயே
ரதா - ஆஸக்தியை உடையவளான
தர்மசாரிணீ - தர்மானுஷ்டானமுள்ளவளான
தாபஸீ - தபஸ்வீ
ஹநுமதா - ஹனுமாரினால்
ஏவம் - இப்படி
உக்த்தா - வினாவப்பட்டவளாய்
ஹநூமந்தம் - ஹனுமாரைப் பார்த்து
ப்ரத்யுவாச - பின்வருமாறு பதில் உரைத்தனள்.

मयो नाम महातेजा मायावी दानवर्षभः ।
तेनेदं निर्मितं सर्वं मायया काञ्चनं वनम् ॥

மயோ நாம மஹாதேஜா மாயாவீ தானவர்ஷப:।
தேநேதம் நிர்மிதம் ஸர்வம் மாயயா காஞ்சனம் வனம் ॥ 10

தானவர்ஷப: - அசுரசிரேஷ்டனான
மய: நாம - மயனென்பவன்
மஹாதேஜா: - மஹாதேஜஸ்வி.
மாயாவீ - மாயைகளில் வல்லவள்.
தேந - அவனால்
இதம் - இந்த
காஞ்சனம் - பொன்மயமான
வனம் - காடு
ஸர்வம் - மற்றுமுள்ள எல்லாம்
மாயயா - மாயையினாலேயே
நிர்மிதம் - ஸ்ருஷ்டிக்கப்பட்டது.

पुरा दानवमुख्यानां विश्वकर्मा बभूव ह ।
येनेदं काञ्चनं दिव्यं निर्मितं भवनोत्तमम् ॥

புரா தானவ முக்யாநாம் விஶ்வகர்மா பபூவ ஹ।
யேநேதம் காஞ்சனம் திவ்யம் நிர்மிதம் பவநோத்தமம் ॥ 11



புரா - முன்பு
இதம் - இந்த
காஞ்சனம் - பொன்மயமான
திவ்யம் - தேவர்களுக்குரிய
பவநோத்தமம் - சிறந்த மாளிகை
நிர்மிதம் - ஸ்ருஷ்டிக்கப்பட்டது.
யேந - எவனாலோ அவன்
தானவ முக்யாநாம் - சிறந்த அரக்கர்களுக்கெல்லாம்
விஶ்வகர்மா - விசுவகர்மாவாக
பபூவ ஹ - ஆனான்.

स तु वर्षसहस्राणि तपस्तप्त्वा महावने ।
पितामहाद्वरं लेभे सर्वमौशनसं धनम् ॥

ஸ து வர்ஷஸஹஸ்ராணி தபஸ் தப்த்வா மஹாவனே।
பிதாமஹாத்வரம் லேபே ஸர்வ மௌஶநஸம் தனம் ॥ 12

ஸ: - அவன்
மஹாவனே - பெருங்கானகத்தில்
வர்ஷ ஸஹஸ்ராணி - ஆயிரம் வருஷங்கள்
தப: - தவத்தை
தப்த்வா - இயற்றி,
பிதாமஹாத் - பிரம்மதேவரிடமிருந்து
ஔஶநஸம் - உசனஸ் என்பவரால் செய்யப்பட்ட சிற்ப சாஸ்திரக் கல்வியுரகிற
தனம் - சிறந்த பொக்கிஷத்தை
ஸர்வம் து - எல்லாவற்றையும்
வரம் - வரமாக
லேபே - அடைந்தான்.

वनं विधाय बलवान् सर्वकामेश्वरस्तदा ।
उवास सुखितः कालं कंचिदस्मिन् महावने ॥

வனம் விதாய பலவான் ஸர்வ காமேஶ்வரஸ்ததா।
உவாஸ ஸுகித: காலம் கஞ்சிதஸ்மின் மஹாவனே ॥ 13

பலவான் - சக்திபெற்றவனாய்
ஸர்வ காமேஶ்வர: - எல்லா போகங்களுக்கும் ஈசுவரனாய்
அஸ்மின் - இந்த
மஹாவனே - பெருங்கானகத்தில்
வனம் - இருப்பிடத்தை
ததா - அப்பொழுது
விதாய - ஏற்படுத்திக்கொண்டு

கஞ்சித் காலம் - கொஞ்சகாலம்
ஸுகித: - இன்பமுற்றவனாய்
உவாஸ - வாழ்ந்தான்.

तमप्सरसि हेमायां सक्तं दानवपुङ्गवम् ।
विक्रम्यैवाशनिं गृह्य जघानेशः पुरंदरः ॥

தமப்ஸரஸி ஹேமாயாம் ஸக்தம் தானவபுங்கவம் ।
விக்ரம்யைவாஶநிம் க்ருஹ்ய ஜகாநேஶ: புரந்தர: ॥ 14

தானவ ஸத்தமம் - அசுரச்ரேஷ்டனை
ஹேமாயாம் - ஹேமை என்ற
அப்ஸரஸி - தெய்வப்பெண்ணின்மேல்
ஸக்தம் - ஆசைகொண்டவனாக
ஈஶ: - த்ரிலோகாதிபதியான
புரந்தர: - இந்திரன்
க்ருஹ்ய - அறிந்துகொண்டு,
அஶநிம் ஏவ - வஜ்ராயுதத்தையே
விக்ரம்ய - ஆரோபித்து,
தம் - அவனை
ஜகாந - கொன்றார்.

इदं च ब्रह्मणा दत्तं हेमायै वनमुत्तमम् ।
शाश्वताः कामभोगाश्च गृहं चेदं हिरण्मयम् ॥

இதம் ச ப்ரஹ்மணா தத்தம் ஹேமாயை வன முத்தமம் ।
ஶாஶ்வதா: காமபோகாஶ்ச க்ருஹம் சேதம் ஹிரண்மயம் ॥ 15

இதம் - இந்த
ஹிரண்மயம் - பொன்மயமான
க்ருஹம் ச - வீடும்
இதம் - இந்த
உத்தமம் - உத்தமமான
வனம் ச - சோலையும்,
ஶாஶ்வதா: - எல்லா
காமபோகா: ச - காமபோகங்களும்
ப்ரஹ்மணா - பிரம்மாவினால்
ஹேமாயை - ஹேமைக்கு
தத்தம் - கொடுக்கப்பட்டது.

दुहिता मेरुसावर्णेरहं तस्याः स्वयंप्रभा ।
इदं रक्षामि भवनं हेमाया वानरोत्तम ॥

துஹிதா மேருஸாவர்ணேரஹம் தஸ்யா: ஸ்வயம் ப்ரபா ।
இதம் ரக்ஷாமி பவனம் ஹேமாயா வாந ரோத்தம ॥ 16



வாநரோத்தம - வானரசிரேஷ்டரே!
அஹம் - நான்
மேருஸாவர்ணே: - மேருஸாவர்ணியின்
ஸ்வயம் ப்ரபா - ஸ்வயம்ப்ரபை என்ற
துஹிதா - பெண்;
தஸ்யா: - இந்த
ஹேமாயா: - ஹேமையினுடைய
இதம் - இந்த
பவனம் - மாளிகையை
ரக்ஷாமி - காத்துக்கொண்டிருக்கிறேன்.

मम प्रियसखी हेमा नृत्तगीतविशारदा ।
तया दत्तवरा चास्मि रक्षामि भवनोत्तमम् ॥

மம ப்ரியஸகீ ஹேமா ந்ருத்த கீத விஶாரதா ।
தயா தத்தவரா சாஸ்மி ரக்ஷாமி பவநோத்தமம் ॥ 17

ந்ருத்த கீத விஶாரதா - நர்த்தனம் கீதம் இவற்றில் வல்லவளான
ஹேமா - ஹேமை
மம - எனது
ப்ரியஸகி - உயிர்த்தோழி.
தயா - அவளாலே
தத்தவரா அஸ்மி - கேட்டுக் கொள்ளப்பட்டவளாக ஆனேன்
ச - அதனால்
பவநோத்தமம் - அழகான மாளிகையை
ரக்ஷாமி - காத்துக் கொண்டிருக்கிறேன்.

किं कार्यं कस्य वा हेतोः कान्ताराणि प्रपश्यथ ।
कथं चेदं वनं दुर्गं युष्माभिरुपलक्षितम् ॥

கிம் கார்யம் கஸ்ய வா ஹேதோ: காந்தாராணி ப்ரபஶ்யத ।
கதம் சேதம் வனம் துர்கம் யுஷ்மாபிருபலக்ஷிதம் ॥ 18

கிம் - என்ன
கார்யம் - காரியம்?
கஸ்ய - எவனுடைய
ஹேதோ: வா - நிமித்தமாய்
காந்தாராணி - காடுகளை
ப்ரபஶ்யத - சுற்றிச்சுற்றிப் பார்க்கிறீர்கள்?
கதம் ச - எப்படித்தான்
இதம் - இந்த
துர்கம் - நுழைவதற்கரிய
வனம் - காடு

யுஷ்மாபி: - உங்களால்
உபலக்ஷிதம் - கண்டுபிடிக்கப்பட்டது?

**इमान्यभ्यवहार्याणि मूलानि च फलानि च ।**
**भुक्त्वा पीत्वा च पानीयं सर्वं मे वक्तुमर्हथ ॥**

இமான்யப்யவஹார்யாணி மூலாநி ச பலாநி ச ॥
புக்த்வா பீத்வா ச பாநீயம் ஸர்வம் மே வக்துமர்ஹத ॥ 19

இமானி - இந்த
அப்யவஹார்யாணி - உண்ணத்தகுந்த
மூலாநி ச - கிழங்குகளையும்
பலாநி ச - பழங்களையும்
புக்த்வா - புசித்து,
பாநீயம் - பருகத் தகுந்ததையும்
பீத்வா - பருகி
ஸர்வம் - எல்லாவற்றையும்
ச - நிச்சயமாய்
மே - எனக்கு
வக்தும் - சொல்ல
அர்ஹத - கடவீர்கள்.

*இத்யார்ஷே ஸ்ரீமத் ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*சதுர்விம்ஶதி ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் கிஷ்கிந்தா காண்டே*
*ஸ்வயம் ப்ரபாதித்யம் நாம ஏகபஞ்சாஶ: ஸர்க: ॥*



த்விபஞ்சாஶ: ஸர்க: - 52

**अथ तानब्रवीत् सर्वान् विश्रान्तान् हरियूथपान् ।**
**इदं वचनमेकाग्रा तापसी धर्मचारिणी ॥**

அத தானப்ரவீத் ஸர்வான் விஶ்ராந்தான் ஹரியூதபான் ।
இதம் வசன மேகாக்ரா தாபஸீ தா்மசாரிணீ ॥ 1

ஏகாக்ரா - ஒருப்பட்ட மனத்தையுடையவளாய்
தர்மசாரிணீ - தர்மநெறியில் நடப்பவளான
தாபஸீ - தாபஸி
விஶ்ராந்தான் - விச்ராந்தியடைந்த
தான் - அந்த
ஸர்வான் - எல்லா
ஹரியூதபான் - வானரோத்தமர்களை
இதம் - இனி வரப்போகிற
வசனம் அத - சொல்லையும்
அப்ரவீத் - சொன்னாள்.

**वानरा यदि वः खेदः प्रनष्टः फलभक्षणात् ।**
**यदि चैतन्मया श्राव्यं श्रोतुमिच्छामि कथ्यताम् ॥**

வானரா யதி வ: கேத: ப்ரநஷ்ட: பலபக்ஷணாத் ।
யதி சைதன்மயா ஶ்ராவ்யம் ஶ்ரோதுமிச்சாமி கத்யதாம் ॥ 2

வானரா: - வானரர்களே!
பலபக்ஷணாத் - பழம் சாப்பிட்டதால்
வ: - உங்களுடைய
கேத: - களைப்பு
ப்ரநஷ்ட: - தீர்ந்துவிட்டதாக
யதி - ஆகில்
ஏதத் - இது
மயா - என்னால்
ஶ்ராவ்யம் - கேட்கத்தகுந்ததாக
யதி ச - இருக்கும்பக்ஷத்தில்
ஶ்ரோதும் - அறிந்துகொள்ள
இச்சாமி - விரும்புகிறேன்;
கத்யதாம் - சொல்லுங்கள்.

**तस्यास्तद्वचनं श्रुत्वा हनुमान् मारुतात्मजः ।**
**आर्जवेन यथातत्त्वमाख्यातुमुपचक्रमे ॥**

தஸ்யாஸ் தத்வசனம் ஶ்ருத்வா ஹநுமான் மாருதாத்மஜ: ।
ஆர்ஜவேன யதாதத்வமாக்யாது முபசக்ரமே ॥ 3

தஸ்யா - அவளது
தத் - அந்த
வசனம் - சொல்லை
ஶ்ருத்வா - கேட்டு,
மாருதாத்மஜ: - வாயுகுமாரரான
ஹநுமான் - ஹனுமார்
ஆர்ஜவேன - அடக்கமாய்
யதாதத்வம் - உள்ளபடி
ஆக்யாதும் - சொல்ல
உபசக்ரமே - தொடங்கினார்.

राजा सर्वस्य लोकस्य महेन्द्रवरुणोपमः ।
रामो दाशरथिः श्रीमान् प्रविष्टो दण्डकावनम् ॥

ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய மஹேந்த்ர வருணோபம: ।
ராமோ தாசரதி: ஶ்ரீமான் ப்ரவிஷ்டோ தண்டகாவனம் ॥

लक्ष्मणेन सह भ्रात्रा वैदेह्या चापि भार्यया ॥

லக்ஷ்மணேன ஸஹ ப்ராத்ரா வைதேஹ்யா சாபி பார்யயா ॥ 4

ஸர்வஸ்ய - எல்லா
லோகஸ்ய - உலகத்திற்கும்
ராஜா - அரசரான
மஹேந்த்ர வருணோபம: - இந்திரனையும் வருணனையும் ஒத்த
தாசரதி: - தசரத குமாரராகிய
ஶ்ரீமான் - ஶ்ரீமானான
ராம: - ஶ்ரீராமர்,
ப்ராத்ரா - உடன்பிறந்தவரான
லக்ஷ்மணேன ஸஹ ச- லக்ஷ்மணரோடும்
வைதேஹ்யா - விதேஹதேச மன்னரின் பெண்ணான
பார்யயா அபி - மனைவியோடும்
தண்டகாவனம் - தண்டகவனத்திற்கு
ப்ரவிஷ்ட: - வந்தார்.

तस्य भार्या जनस्थानाद्रावणेन हृता बलात् ॥

தஸ்ய பார்யா ஜனஸ்தாநாத் ராவணேன ஹ்ருதா பலாத் ॥ 5

தஸ்ய - அவருடைய
பார்யா - மனைவி
ஜனஸ்தாநாத் - ஜனஸ்தானத்திலிருந்து
ராவணேன - ராவணனால்
பலாத் - நிர்ப்பந்தமாய்
ஹ்ருதா - திருடிக்கொண்டு போகப்பட்டாள்.



वीरस्तस्य सखा राज्ञः सुग्रीवो नाम वानरः ।
राजा वानरमुख्यानां येन प्रस्थापिता वयम् ॥

வீரஸ்தஸ்ய ஸகா ராஜ்ஞ: ஸுக்ரீவோ நாம வாநர: ।
ராஜா வாநர முக்யாநாம் யேந ப்ரஸ்தாபிதா வயம் ॥ 6

ஸுக்ரீவ: நாம - சுக்ரீவர் என்ற
வாநர: - வானர
வீர: - வீரர்
தஸ்ய - அந்த
ராஜ்ஞ: - அரசருக்கு
ஸகா - அன்பர்.
வாநர முக்யாநாம் - வானரச்ரேஷ்டர்களுக்கு
ராஜா - அரசர்.
யேந - அவரால்
வயம் - நாங்கள்
ப்ரஸ்தாபிதா: - அனுப்பப்பட்டவர்கள்.

अगस्त्याचरितामाशां दक्षिणां यमरक्षिताम् ।
सहैभिर्वानरैर्मुख्यैरङ्गदप्रमुखैर्वयम् ॥

அகஸ்த்யா சரிதா மாஶாம் தக்ஷிணாம் யமரக்ஷிதாம் ।
ஸஹை பிர்வாநரைர் முக்யைரங்கத ப்ரமுகைர்வயம் ॥ 7

रावणं सहिताः सर्वे राक्षसं कामरूपिणम् ।
सीतया सह वैदेह्या मार्गध्वमिति चोदिताः ॥

ராவணம் ஸஹிதா: ஸர்வே ராக்ஷஸம் காமரூபிணம் ।
ஸீதயா ஸஹ வைதேஹ்யா மார்கத்வமிதி சோதிதா: ॥ 8

ஏபி: - இந்த
அங்கத ப்ரமுகை: - அங்கதனைத் தலைமையாகவுடைய
முக்யை: - ப்ரதானரான
வாநரை: - வானரர்களோடு
ஸஹ - கூட
வயம் - நாங்கள்
ஸர்வே - எல்லோரும்
ஸஹிதா: - ஒன்றுசேர்ந்தவர்களாய்
வைதேஹ்யா - விதேக மன்னரின் பெண்ணான
ஸீதயா ஸஹ - ஸீதையோடு கூட
காமரூபிணம் - நினைத்த உருவமெடுக்கவல்ல
ராவணம் - ராவணனென்ற
ராக்ஷஸம் - ராக்ஷதனையும்

மார்கத்வம் இதி - தேடக்கடவீர்களென்று
அகஸ்த்யா சரிதாம் - அகஸ்தியர் வசிப்பதாயும்
யம ரக்ஷிதாம் - யமனது காவலிலுள்ளதுமான
தக்ஷிணாம் - தென்
ஆஶாம் - திக்குக்கு
சோதிதா: - ஆக்ஞாபிக்கப்பட்டவர்கள்.

**विचित्य तु वयं सर्वे समग्रां दक्षिणां दिशम् ।**
**बुभुक्षिताः परिश्रान्ता वृक्षमूलमुपाश्रिताः ॥**

விசித்ய து வயம் ஸர்வே ஸமக்ராம் தக்ஷிணாம் திஶம் ।
புபுக்ஷிதா: பரிஶ்ராந்தா வ்ருக்ஷமூலமுபாஶ்ரிதா: ॥ 9

வயம் - நாங்கள்
ஸர்வே - எல்லோரும்
தக்ஷிணாம் - தென்
திஶம் - திசையை
ஸமக்ராம் - முழுவதையும்
விசித்ய - தேடி
புபுக்ஷிதா: - பசிகொண்டவர்களாய்
பரிஶ்ராந்தா: - மிகக் களைத்தவர்களாய்
து - இந்த ஸ்திதியில்
வ்ருக்ஷமூலம் - ஒரு மரத்தினடியை
உபாஶ்ரிதா: - அடைந்தோம்.

**विवर्णवदनाः सर्वे सर्वे ध्यानपरायणाः ।**
**नाधिगच्छामहे पारं मग्नाश्चिन्तामहार्णवे ॥**

விவர்ணவதநா: ஸர்வே ஸர்வே த்யானபராயணா: ।
நாதிகச்சாமஹே பாரம் மக்நாஶ்சிந்தா மஹார்ணவே ॥ 10

ஸர்வே - எல்லோரும்
விவர்ண வதநா: - முகம் வாடினவர்களாக ஆனோம்;
ஸர்வே - எல்லோரும்
த்யான பராயணா: - சிந்தை மேலிட்டவர்களாக ஆனோம்;
சிந்தா மஹார்ணவே - கவலைப் பெருங்கடலில்
மக்நா: - மூழ்கினவர்களாய்
பாரம் - முடிவை
அதிகச்சாமஹே ந - காணாதிருந்தோம்.

**चारयन्तंस्ततश्चक्षुर्दृष्टवन्तो वयं बिलम् ।**
**लतापादपसंछन्नं तिमिरेण समावृतम् ॥**



சாரயந்தஸ்ததஶ்சக்ஷுர் த்ருஷ்டவந்தோ வயம் பிலம் ।
லதாபாதப ஸஞ்சன்னம் திமிரேண ஸமாவ்ருதம் ॥ 11

சக்ஷு: - கண்களை
சாரயந்த: - அங்குமிங்கும் செலுத்திய
வயம் - நாங்கள்
தத: - அப்பொழுது
லதா பாதப ஸஞ்சன்னம் - கொடிகளாலும் மரங்களாலும் சூழப்பட்ட
திமிரேண - இருளால்
ஸமாவ்ருதம் - நிறைந்துள்ள
பிலம் - பிலத்தை
த்ருஷ்ட வந்த: - கண்டவர்களாக ஆனோம்.

**अस्माद्धंसा जलक्लिन्नाः पक्षैः सलिलविस्रवैः ।**
**कुरराः सारसाश्चैव निष्पतन्ति पतत्रिणः ॥**

அஸ்மாத் ஹம்ஸா ஜலக்லிந்நா: பக்ஷை: ஸலிலவிஸ்ரவை: ।
குரரா: ஸாரஸாஶ்சைவ நிஷ்பதந்தி பதத்ரிண: ॥ 12

ஹம்ஸா: ச - ஹம்ஸங்களும்,
குரரா: - மீன்குத்திப் பறவைகளும்,
ஸாரஸா: - குளத்திலிருப்பவைகளான
பதத்ரிண: ஏவ - பக்ஷிகளும்,
ஸலில விஸ்ரவை: - நீரை ஒழுகவிடும்
பக்ஷை: - இறக்கைகளோடு
ஜலக்லிந்நா: - ஜலத்தில் நனைந்தவைகளாய்
அஸ்மாத் - இவ்விடமிருந்து
நிஷ்பதந்தி - வெளிப்பட்டுவந்தன.

**साध्वत्र प्रविशामेति मया तूक्ताः प्लवङ्गमाः ॥**

ஸாத்வத்ர ப்ரவிஶாமேதி மயா தூக்தா: ப்லவங்கமா: ॥ 13

ஸாது - நல்லது,
அத்ர - இதில்
ப்ரவிஶாம - புகுவோம்,
இதி - என்று
ப்லவங்கமா: - வானரர்கள்
மயா - என்னால்
து - இப்பொழுது
உக்தா: - சொல்லப்பட்டார்கள்.

**तेषामपि हि सर्वेषामनुमानमुपागतम् ।**
**गच्छाम प्रविशामेति भर्तृकार्यत्वरान्विताः ॥**

